# அழகப்பரின் அதிசய சாதனைகள்

**பகீரதன்**



தியாகராயநகர் :: சென்னை—17.

# பதிப்புரை

அமரர் அழகப்பரின் நினைவாக "அழகப்பரின் அதிசய சாதனைகள்" என்ற புத்தகத்தினை வெளியிடுகிறோம்.

வள்ளல் அழகப்பர் அள்ளிக் கொடுத்த பெருநிதியால் தலை நிமிர்ந்து நிற்கும் பள்ளிகளும்—கல்லூரிகளும் அவர் புகழை என்றென்றும் பாடிக்கொண்டிருக்கும். அவைகள் அறிவுச் செம்மல்களை விளைவித்து தமிழ் நிலத்தை செழிப்பாக்குகின்றன கல்வி வளத்தால்.

அழகப்பரின் திரமும், தீரமும் அவர் பொருள் ஈட்டும் முயற்சியில் கொண்டிருந்த தீவிரமும்—அதை வாரி வழங்குவதில் கொண்டிருந்த வற்றாத நெஞ்சு ஈரமும், வாழ்வாம் சுடர் விளக்குக்குத் தூண்டுகோல் போல—எடுத்துக் காட்டாக விளங்குமென்பது திண்ணம்.

திரு பகீரதன் அவர்கள் அழகப்பரின் நன்கொடையால் விளைவித்த கல்லூரிகளையும் அறநிலையங்களையும் நேரில் சென்று பார்த்து விளக்கமாக எழுதியுள்ளார்கள். முயற்சியின் உயர்ச்சியும், அதை முழுதும் பெற்று வாழ்ந்து சிறந்த அழகப்பரின் வாழ்வின் சிறப்பும் வளமாகக் காணக் கிடக்கிறது இந்நூலில்.

வள்ளல் தன்மையில் பாரி மாரிக்கும் ஒப்பானவர் என்று சிறப்பிப்பர். இதனை அழகப்பரின் வள்ளல் தன்மைக்கும் ஒப்பு உவமையாகக் கூறினால் மிகையாகுமா?

தமிழ் உலகம் இதனை ஏற்று மகிழும் என்று நம்புகிறோம்.

கலைஞன் பதிப்பகம்,
சென்னை-17.

சு. மாசிலாமணி

## பகீரதனின் பிற நூல்கள்

| | ரூ. | பை. |
|---|---|---|
| வட இந்திய யாத்திரை | 5 | 00 |
| தேன் மொழியாள் | 3 | 50 |
| உழைப்பால் உயர்ந்த ஏழை | 2 | 25 |
| முல்லை வனத்து மோகினி | 1 | 50 |
| குயிலினி | 2 | 00 |

# 1. அழகப்பரின் அதிசய சாதனைகள்

டாக்டர் அழகப்பச் செட்டியார் ஒரு அதிசய மனிதர் மட்டுமல்ல, அவருடைய சாதனைகளும் அதிசய மானவை. ஒரு சமயம் அவர் பம்பாய்க்குப் போயிருந்தார். மேல்நாட்டு முறையில் நடத்தப்பட்டு வரும் ரிட்ஸ் ஹோட்டலுக்குச் சென்றார். " தங்குவதற்கு அறை வேண்டும் " என்று கேட்டார்.

" அறை காலி இல்லை " என்று சொல்லிவிட்டு டாக்டர் அழகப்பச் செட்டியாரை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார் அந்த ரிட்ஸ் ஹோட்டல் மானேஜர்.

" இந்த ஹோட்டலில் எத்தனை அறைகள் இருக்கின்றன ?" என்று கேட்டார் அழகப்பர்.

" என்ன, ஹோட்டலை விலைக்கு வாங்குகிறவர் மாதிரி அல்லவா கேள்வி கேட்கிறீர் ?" என்றார் ஹோட்டல் மானேஜர்.

" ஆமாம். விலைக்கு வாங்கத்தான் போகிறேன். என்ன விலை ?" என்றார் அழகப்பர்.

லட்சக் கணக்கில் ஒரு பெரிய தொகையைச் சொன்னார் ஹோட்டல் மானேஜர்.

"இந்தாரும் இப்பொழுதே அட்வான்ஸ் வாங்கிக் கொள்ளும்" என்றார் அழகப்பர்.

ஹோட்டல் மானேஜர் ஒருகணம் ஒன்றும் புரியாமல் திகைத்துப் போனார். கடைசியில் டாக்டர் அழகப்பச் செட்டியார் அந்த ரிட்ஸ் ஹோட்டலை விலைக்கு வாங்கியே விட்டார்.

வியாபார விஷயங்களிலேதான் இப்படி யாரும் எதிர் பார்க்க முடியாதபடி காரியங்கள் செய்வார் என்றால், தர்மங்கள் செய்யும் விஷயங்களிலும் டாக்டர் அழகப்பரின் காரியங்கள் எல்லோரையும் திகைக்க வைத்துவிடும். அந்தத் தர்ம காரியங்களை நிறைவேற்றி வைப்பதிலும் அவருடைய சாதனைகள் யாரும் எதிர்பாராத முறையில் அதிசயமாக இருக்கும். பார்ப்பவர்களையும் கேட்பவர்களையும் தூக்கி வாரிப் போட்டுவிடும்.

* * *

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத் தேழாம் ஆண்டு அடையாற்றில் மாண்டிசோரி கல்விப் பயிற்சி சாலை திறப்புவிழா நடைபெற்றது. அந்த விழாவுக்கு டாக்டர் அழகப்பரும் சென்றிருந்தார். விழாவில் வைஸ் சான்ஸலர் லட்சுமணசாமி முதலியார் பேசினார். "ஒரு லட்ச ரூபாய் ரொக்க நிதி ஏற்படுத்தினால் சென்னை ராஜ்யத்தில் ஒரு கலைக் கல்லூரி ஆரம்பிக்கலாம்" என்றார்.

இதைக் கேட்டதும் டாக்டர் அழகப்பரின் மூளை வேலை செய்ய ஆரம்பித்துவிட்டது. தம்முடைய ராமநாதபுரம் ஜில்லாவில் ஒரு கல்லூரி கூட இல்லாமல் இருப்பது நினைவுக்கு வந்தது. சட்டென்று எழுந்திருந்தார். வைஸ் சான்ஸலர் லட்சுமணசாமி முதலியாரிடம் சென்றார். "இந்தாருங்கள், ஒரு லட்சம். காரைக்குடியில் கல்லூரி ஆரம்பிக்கலாம்!" என்றார். சொல்லிச் சில நாளைக்கெல்லாம் காரைக்குடியில் கல்லூரி ஆரம்பமாகி விட்டது.

வாடகைக் கட்டடத்தில் எத்தனை நாட்கள் கல்லூரி நடத்துவது? கல்லூரிக்குச் சொந்தக் கட்டடம் வேண்டாமா?

காரைக்குடிக்குப் பக்கத்திலேயே அறுநூறு ஏக்கரா நிலத்தை வாங்கினார். அதில் நூற்று ஐம்பது ஏக்கரா நிலத்தை மேற்படி கலைக் கல்லூரிக்கு என்று தாராளமாக எழுதி வைத்தார்.

அவ்வளவு விஸ்தாரமான நிலம் வைத்திருக்கும் போது அதற்குத் தகுந்த விசாலமான கட்டடம் வேண்டாமா? சில மாதங்களில் அற்புதமான கட்டடம் எழும்பிவிட்டது.

டாக்டர் அழகப்பரின் கல்லூரி என்றால் அது அற்ப சொற்பமாக இருக்கலாமா? வெறும் பி. ஏ. வகுப்பு மட்டும் போதுமா? பி. எஸ்ஸி., பி. காம்., பி. ஏ. (ஆனர்ஸ்) எல்லாம் வேண்டாமா? பௌதிகம், ரஸாயனப் பகுதிகள் இருக்க வேண்டாமா?

கட்டாயம் வேண்டியதுதான். அதற்குப் பணம் எவ்வளவு ஆகும்? எவ்வளவு ஆனால் என்ன? டாக்டர் அழகப்பர் மனம் வைத்துவிட்டால் பணம் ஒரு பெரிய காரியமா?

ஏதோ ஒன்பது லட்சம் ஆகும் என்று சொன்னார்கள். ஒன்பது லட்சத்தையும் டாக்டர் அழகப்பரே கொடுத்தார். ரொக்கமாகக் கொடுத்தார்; வீடாகக் கொடுத்தார்; பல சொத்துக்களாகக் கொடுத்தார்.

'வெறும் கலைக் கல்லூரிகளைப் பெருக்கி பி. ஏ.க்களை உற்பத்தி செய்வதில் என்ன பிரயோசனம்?' என்ற சில அறிஞர்களின் அனுபவ பூர்வமான சொல் டாக்டர் அழகப்பரின் காதில் விழுந்தது. பொறி இயல் கல்லூரி ஆரம்பிக்கத் தீர்மானித்து அதைக் காரியத்திலும் நிறைவேற்றினார்.

நன்றாகப் பயின்ற என்ஜினியர்கள் இருந்தால் மட்டும் போதுமா? அவர்களுக்குத் துணை செய்யும் கைத்திறமை பெற்றவர்கள் வேண்டாமா? உடனே ‘பாலிடெக்னிக்’ கல்லூரியும் ஆரம்பித்தார்.

‘ஆண்களுக்கு வேண்டிய படிப்புக்குத்தான் டாக்டர் அழகப்பர் ஏற்பாடு செய்கிறார். நம்முடைய பெண்மணிகளுக்கும், சின்னஞ்சிறு குழந்தைகளுக்கும் ஒன்றையும் காணோம்’ என்று யாரோ புண்ணியவான் சொல்லி விட்டார். உடனே டாக்டர் அழகப்பர் பெண்கள் கல்லூரியையும், குழந்தைகளுக்கான ‘பிரிபரேட்டரி’ பள்ளிக் கூடம் ஒன்றையும் இசைக்கல்லூரியையும் தொடங்கினார்.

சென்னை ராஜ்யத்தில் உடற் பயிற்சிக் கல்லூரி ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது. சென்னைக்கு அருகில் சைதாப்பேட்டையில் உள்ள ஒய். எம். சி. ஏ. உடற்பயிற்சிக் கல்லூரியை விட்டால் வேறு வழியில்லை என்று இருந்த நிலைமையையும் மாற்றினார். காரைக்குடியிலேயே ஒரு உடற்பயிற்சிக் கல்லூரியையும் சென்ற ஆகஸ்டு மாதம் ஆரம்பித்துவிட்டார்.

1947-ம் ஆண்டு 140 மாணவர்களுடன் ஆரம்பமான கல்லூரி இன்று ஆலெனப் படர்ந்து தழைத்துவிட்டது. சுமார் 2,500 மாணவர்கள் கொண்ட பெரிய கல்வி ஸ்தாபனமாக ஓங்கி வளர்ந்துவிட்டது.

அறுநூறு ஏக்கரா நிலப்பரப்பில் இருந்த கல்லூரி இன்று ஆயிரத்து இருநூறு ஏக்கர் நிலப்பரப்பில் பல கல்லூரிகளாகப் பெருகிவிட்டது. இந்தக் கல்லூரிகளின் மதிப்பு இப்பொழுது ஒரு கோடி ரூபாய்க்கு மேல் இருக்கும். ஐந்து வயதில் சின்னஞ்சிறு குழந்தையாக அழகப்பரின் கல்வி ஸ்தாபனத்துக்குள் நுழைந்து விட்டால் போதும். ஏதாவது ஒரு பட்டப் படிப்புடன் வெளியில் வரலாம். இந்த அருமையான வசதி சென்னை ராஜ்யத்தில் வேறு எங்கும் இல்லை என்று சொல்லலாம்.

எல்லாம் டாக்டர் அழகப்பரின் தர்மம். அவருடைய அதிசய சாதனைகள்.

இப்படியெல்லாம் மூச்சுத் திணறிப் போகும்படி கல்வித் தர்மம் செய்த டாக்டர் அழகப்பர் தமிழ் நாட்டுக்கு இன்னொரு மகத்தான பேருபகாரம் புரிந்திருக்கிறார்.

தமிழ் நாட்டில் மிகப் பெரிய மின்சார ரஸாயன ஆராய்ச்சிக் கூடம் ஒன்றும் ஆரம்பித்து நடத்துவதற்குத் துணை புரிந்திருக்கிறார்.

இந்திய சர்க்கார் சென்னை ராஜ்யத்தில் மின்சார ரஸாயன ஆராய்ச்சிக் கூடம் ஒன்று ஆரம்பிப்பதாக யோசனை செய்தார்கள். இதை எப்படியோ தெரிந்து கொண்டார் டாக்டர் அழகப்பர். தாமதம் செய்யாமல் உடனே டில்லிக்குப் பறந்து சென்றார்.

“முந்நூறு ஏக்கரா நிலம் தருகிறேன். பதினைந்து லட்சம் ரூபாய் நன்கொடை தருகிறேன். தமிழ் நாட்டில் காரைக்குடியில் ஆரம்பியுங்கள்” என்று கூறினார்.

இந்திய சர்க்கார் விஞ்ஞான இலாகா காரியதரிசி டாக்டர் பட்நகர் காரைக்குடிக்கு வந்தார். இடத்தைப் பார்த்தார். “நிலம் இருக்கிறது; சரிதான்! தண்ணீர் வசதி இல்லையே!” என்றார். இதைக் கேட்டதும் சிலர் மனத்தில் சந்தேகம் எழுந்தது. பலருக்குப் ‘பகீர்! பகீர்!’ என்றது.

“தண்ணீர்தானே! அது பாதாளத்தில் இருந்தாலும் கொண்டு வந்து தருகிறேன்!” என்றார் டாக்டர் அழகப்பர்.

உடனே பூமிக்கு அடியில் இருநூறு அடி முந்நூறு அடி ஆழம் போய்த் தண்ணீரை வெளியில் கொண்டு வரக்கூடிய ‘போர் பம்பிங்’ இயந்திரத்தை டாக்டர்

அழகப்பர் கொண்டு வந்தார். பூமிக்குள் ஆழமாகக் குடைந்ததும் தண்ணீர் பொங்கிக் கொண்டு வெள்ளமாக மேலே வந்தது.

டாக்டர் பட்நகரின் ஆட்சேபம் அடிபட்டுப் போயிற்று. காரைக்குடியில் மின்சார ரஸாயன ஆராய்ச்சிக் கூடம் ஆரம்பமாயிற்று.

இவ்வளவு பாடுபட்டு ஆரம்பமானதும் ஆராய்ச்சிக் கூடத்தைச் சாதாரண மனிதரைக்கொண்டு அஸ்திவாரம் இடச் செய்யலாமா? ஆகவே மனிதருல மாணிக்கமான பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவைப் புது தில்லியிருந்து அழைத்துவந்து அஸ்திவாரம் இடச் செய்தார். நேருஜி அவர்களும் டாக்டர் அழகப்பரின் வேண்டு கோளுக்கு இணங்கிக் காரைக்குடிக்கு வந்தார். தம் முடைய பொற் கரங்களால் மின்சார - ரஸாயன ஆராய்ச்சிக்கூடத்துக்கு அடிப்படைக் கல்நாட்டினார். மின்சார-ரஸாயன ஆராய்ச்சிக்கூட அஸ்திவார விழாவில் அகில இந்தியாவில் இருந்தும் பல விஞ்ஞானிகள் வந்து கலந்து கொண்டனர். தமிழ் நாடே திரண்டு சென்று விழாவைப் பார்த்தது. பல லட்சக்கணக்கான மக்கள் கூடி நின்ற பெருங்கூட்டத்தில் நேருஜி பேசினார்.

டாக்டர் அழகப்பரின் அதிசய சாதனைகளால் இன்று தமிழ் நாடே உயர்ந்துவிட்டது. ராமநாதபுரம் ஜில்லா மிக முக்கியமான ஜில்லாவாக மாறிவிட்டது. பர்மா, மலேயா, இலங்கை இங்கிருந்தெல்லாம் பணம் வருவது குறைந்தபின் செட்டிநாட்டின் களையே இறந்து விட்டது என்று சொல்லும்படியான நிலை ஏற்பட்டது. அந்த நிலைமையை டாக்டர் அழகப்பர் மாற்றிவிட்டார். அவருடைய சாதனைகளால் உருவான அழகப்பர் கல் லூரிகளால் காரைக்குடியும், அதைச் சுற்றியுள்ள இதர செட்டி நாட்டு நகரங்களும் மீண்டும் களை பெற ஆரம்

பித்துவிட்டன. செட்டிநாட்டுக்கே டாக்டர் அழகப்பர் புதிய உயிர் அளித்துவிட்டார் என்றுகூடச் சொல்லலாம்.

அவருடைய அதிசய சாதனைகளாலும், அளவற்ற தர்மங்களினாலும் உருவான அழகப்பா கல்லூரிகளை எல்லாம் தமிழ் மக்கள் எல்லாரும் பார்க்க வேண்டாமா? அத்துடன் அங்கிருக்கும் மின்சார ரஸயான ஆராய்ச்சிக் கூடத்தையும் கண்டு களிக்க வேண்டாமா? கட்டாயம் பார்க்கவேண்டும்.

முதலில் மின்சார - ரஸாயன ஆராய்ச்சிக் கூடத்தைப் பார்த்துவிட்டுப் பிறகு கல்லூரிகளை எல்லாம் பார்க்கலாம்.

## ஆராய்ச்சிக் கூடம்

வளர்ந்து வரும் உலகத்தில் இதர நாடுகளுடன் பாரதமும் சரிநிகர் சமானமாக வாழ வேண்டுமானால் அதற்கு எல்லா நவீனத் துறைகளிலும் நாம் உலகத்தோடு சமமாக வளரவேண்டும்; வளர்ந்தே ஆகவேண்டும். அதற்கு எல்லாத் துறைகளிலும் ஆராய்ச்சி நிலையங்கள் காணவேண்டும். இதை நன்கு உணர்ந்த பாரத சர்க்கார், தொழில் - விஞ்ஞான அபிவிருத்திக்கான பல துறைகளில் இயங்கும் பதினொன்கு ஆராய்ச்சிக் கூடங்களை இந்தியாவின் பல பாகங்களில் ஏற்படுத்தி யிருக்கின்றனர். இந்த ஆராய்ச்சிக் கூடங்கள் உருவாவதற்குக் காரணமாயிருந்தவர் விஞ்ஞான மேதை டாக்டர் எஸ். எஸ். பட்நகர்.

தென் இந்தியாவில் மூன்று ஆராய்ச்சி நிலையங்கள் இருக்கின்றன. மைசூரில் உணவு ஆராய்ச்சி நிலையமும், சென்னை நகரை அடுத்துள்ள கிண்டியில் தோல் ஆராய்ச்சி நிலையமும், காரைக்குடியில் மின்சார - ரஸாயன ஆராய்ச்சி நிலையமும் இருக்கின்றன.

தமிழ் நாட்டில் மட்டும் இரண்டு ஆராய்ச்சி நிலையங்கள் இருப்பது தமிழ் மக்கள் பெருமைப்படக் கூடிய காரியம். இதற்குத் துணை புரிந்தவர் டாக்டர் அழகப்பர் என்பதை மறந்துவிடக்கூடாது. டாக்டர் செட்டியார் அன்று அவ்வளவு சிரத்தை எடுத்துக் கொள்ளாவிட்டால் மின்சார - ரஸாயன ஆராய்ச்சி நிலையம் நிச்சயமாகத் தமிழ் நாட்டில் ஏற்பட்டிருக்காது. இந்தப் பேருதவியைச் செய்திருக்கும் டாக்டர் அழகப்பச் செட்டியாருக்குத் தமிழ் மக்களின் சார்பாக நன்றியும் வணக்கமும் செலுத்துகிறேன்.

மின்சாரத்தைக் கொண்டு வெளிச்சம்தான் உண்டாக்கலாம் என்று சாதாரணமாக எல்லாருக்கும் தெரியும். இன்னும் கொஞ்சம் அனுபவப் பட்டவர்கள் நகர்ப்புறத்தில் வாழ்பவர்கள், மின்சாரத்தைக் கொண்டு ரயில் விடலாம்; மோட்டார் விடலாம்; உயரமான மூன்று அடுக்கு மாடிகள் உள்ள பெரிய கட்டடங்களுக்கு ஏறி இறங்கும் 'லிப்ட்' முதலியவைகளை இயக்கலாம், டெலிபோன், ரேடியோ முதலியவைகளுக்கு உபயோகப் படுத்தலாம் என்பதை அறிவார்கள். இதற்கு மேல் மின்சாரத்தின் உபயோகத்தைப் பற்றி அதிகமாக ஒன்றும் தெரியாது. ஆனால் மின்சாரத்தைக் கொண்டு இன்னும் எத்தனை எத்தனையோ அதிசயங்களைச் செய்யலாம் என்பதைக் காரைக்குடியில் உள்ள மின்சார - ரஸாயன ஆராய்ச்சிக் கூடத்துக்குள் சென்று பார்த்தபோது புரிந்துகொள்ள முடிந்தது.

இந்த ஆராய்ச்சிக் கூடத்தில் பெரும்பாலும் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்களே தொண்டாற்றுகிறார்கள். இந்த நிலையம் காரைக்குடியில் இருப்பதால் தமிழ் நாட்டில் எத்தனையோ ஆராய்ச்சி நிபுணர்கள் தோன்றுவதற்கு வசதி ஏற்படும். அவர்களுடைய திறமையால்

தமிழ் நாடும், இந்தியாவும் மேன்மையடையும் என்று ஏன் சொல்ல முடியாது?

வெளியில் பல வேலைகளை வைத்துக் கொண்டு, ஏதோ அதிசயமான காட்சிகளைப் பார்க்கப் போகிறோம் என்று எண்ணிக் கொண்டு ஆராய்ச்சிக் கூடத்துக்குள் பிரவேசித்தால் ஆராய்ச்சிக்கூடம் ஒன்றும் பிரமாதமாகத் தோன்றாது. "இதுதான் ஆராய்ச்சிக் கூடத்தின் அழகு மிக்க மண்டபம், இதோ ஆராய்ச்சிக் கூடத்தின் புத்தக சாலை; பல மாதிரி சாமான்களைச் செப்பனிடும் தொழிற் கூடம்; இவ்வளவுதானே!" என்று சில நிமிஷங்களிலேயே ஆராய்ச்சிக் கூடத்தைச் சுற்றிப் பார்த்து விட்டுத் திரும்பிவிடலாம்.

அவ்விதம் இல்லாமல், சற்று நிதானமாக, ஏதோ பெரிய ஆராய்ச்சி என்று சொல்கிறார்களே, பல லட்சக் கணக்கான ரூபாய்களை வாரி இறைத்துப் பணியாற்றி வருகிறார்களே, கட்டாயம் ஏதோ பெரிய காரியங்கள் தான் நடைபெறுகின்றன, அவைகளைத் தெரிந்து கொள்ள வேண்டியது மிக அவசியம் என்று எண்ணி இந்த ஆராய்ச்சிக் கூடத்தின் விசாலமான கட்டடத்துக்குள் செல்வோம்.

காரைக்குடியில் மின்சார - ரஸாயன ஆராய்ச்சிக் கட்டடம் அமைந்திருக்கும் இடமும், நீளம், அகலம், உயரம் எல்லாவற்றிலுமே சிறந்து நிற்கும் கட்டடமும் நம்மைக் காரைக்குடியிலிருந்து வேறு எங்கோ அழைத்துச் சென்று விடுகின்றன. அந்தக் கட்டடத்துக்குள் புகுந்ததுமே அதன் அமைப்பு நம் கவனத்தைக் கவருகிறது. பளபளவென்று கண்ணைப் பறிக்கும் அந்தக் கட்டடம் நமக்கு என்னென்னவோ ஆராய்ச்சிக் கதைகள் எல்லாம் கூற ஆரம்பித்துவிடுகின்றன. நம்மையும் அறியாமல் திகைத்து நிற்கும்போது, "மண்ணை

அப்படி நிற்கிறீர்கள் ?" என்ற குரல் நம் நினைப்பைக் கலைக்கிறது.

"அதெல்லாம் ஒன்றுமில்லை" என்று மழுப்பி விட்டு உள்ளே செல்லுகிறோம்.

மின்சார - ரஸாயன ஆராய்ச்சிக் கூடத்துக்குள் நுழைந்ததும், முதலில் அதன் கௌரவ டைரக்டர் டாக்டர் பி. பி. டே அவர்களிடம் அழைத்துச் சென்றார்கள்.

டாக்டர் டே அகமும் முகமும் மலர வரவேற்று உபசரித்தார். அடுத்த கணம் மின்சார-ரஸாயன ஆராய்ச்சி நிபுணர் திரு வி. ஆராவமுதனைக் கூப்பிட்டார். ஆராய்ச்சிக் கூடம் முழுவதையும் அழைத்துப் போய்க் காட்டச் சொன்னார்.

திரு ஆராவமுதன் சுருக்கமாக இவ்வாராய்ச்சிக் கூடம் ஆரம்பித்த கதையைக் கூறிவிட்டு ஆராய்ச்சிக் கூடத்தின் ஒவ்வொரு பகுதியையும் பார்க்க அழைத்துச் சென்றார்.

மின்சார-ரஸாயன நிபுணருடன் ஆராய்ச்சிக் கூடத்துக்குள் சென்று அங்கு நடைபெறும் அதிசயமான ஆராய்ச்சி விந்தைகளைப் பார்த்து வருவோம்.

## 2. ஆராய்ச்சி விந்தைகள்

காரைக்குடியில் இருக்கும் மிகப் பெரிய மின்சார ரஸாயன ஆராய்ச்சிக் கூடத்தின் ஒவ்வொரு பகுதியையும் பார்ப்பதற்காக அந்தக் கட்டடத்தின் நீளமான வராந்தா வழியாகச் செல்லும்போதே, "இனிமேல் நாம் எல்லா ரஸாயனப் பொருள்களையும் இந்தியாவிலேயே தயாரித்துவிடலாம்" என்றார் மின்சார ரஸாயன நிபுணர் திரு ஆராவமுதன். நான் வியப்படைந்து

போனேன். "அப்படியானால் நம் நாட்டில் இது வரையில் ரஸாயனப் பொருள்களே உற்பத்தியாக வில்லையோ?" என்று கேட்டேன்.

"எத்தனையோ ரஸாயனப் பொருள்கள், பல கோடி ரூபாய் மதிப்புள்ளவைகள் வருஷா வருஷமும் வெளி நாடுகளில் இருந்து இந்தியாவுக்கு வருகின்றன" என்று பதில் கிடைத்தது.

ராமநாதபுரம் ஜில்லாவைச் சேர்ந்த ஒருவர் எங்களுடன் இருந்தார். "எல்லா ரஸாயனப் பொருள்களும் இந்தியாவிலேயே தயாராகப் போகின்றன" என்று பெருமையாகச் சொல்லிக்கொண்டார். பொதுவாகத் தமிழ் நாட்டில் உள்ள இதர ஜில்லாக்காரர்கள் ராமநாதபுரம் ஜில்லாக்காரர்களைப் பார்த்து, "உங்கள் ஜில்லாவில் என்ன இருக்கிறது?" என்று சற்று ஏளனமாகக் கேட்டுவிட்டுத் தங்கள் ஜில்லாக்களை நினைத்துப் பெருமைப்படுவது வழக்கம்.

இனிமேல் யாரும் அப்படி ராமநாதபுரம் ஜில்லாக்காரர்களைப் பார்த்துக் கேட்டுவிட முடியாது. அவர்கள் ஜில்லாவில் அற்புதமான அழகப்பா கல்லூரிகள் இருக்கின்றன. மின்சார ரஸாயன ஆராய்ச்சிக்கூடம் இருக்கிறது. இதனால் ராமநாதபுரம் ஜில்லாவின் புகழ் உலகமெங்கும் பரவப் போகிறது.

"வாருங்கள், முதலில் இந்த ஆராய்ச்சிப் பகுதிக்குள் செல்வோம்" என்றார் ரஸாயன நிபுணர் ஆராவமுதன்.

இந்தப் பகுதிக்குள் சென்றவுடன் எனக்கு ஒன்றுமே புரியவில்லை. ஏதோ ஒருவிதமான மணம் தலையைக் கிறுகிறு என்று சுற்றும்படிச் செய்தது. அந்தத் தலைச்சுற்றலை ஒருவாறு சமாளித்துக்கொண்டு, "என்னென்ன ஆராய்ச்சிகள் இங்கு நடைபெறுகின்றன?

அதனால் என்ன நன்மைகள் ஏற்பட்டுவிடும்?" என்று ஒருமாதிரி கேட்டு வைத்தேன்.

"எத்தனையோ நன்மைகள் ஏற்படப் போகின்றன. எவ்வளவோ அதிசயமான ஆராய்ச்சிகள் நடைபெற்று அதில் நல்ல வெற்றியும் பெற்றிருக்கிறோம்!" என்று சுடச்சுடப் பதில் கூறினார் ஆராவமுதன். அவருடைய பதில் என்னை ஆச்சரியத்தில் கொண்டு போட்டு ஆராய்ச்சி செய்யத் தூண்டிவிட்டது.

"இதோ பாருங்கள், 'ஹைட்ரஸின்' (Hydrazine) என்னும் பொருளை இங்கு தயாரிக்க முயற்சி செய்து வருகிறோம். இது நம் நாட்டில் குறைவு. அமோனியா வாயுவிலிருந்து ஹைட்ரஸினை உண்டாக்க ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றன. இதுபோலவே "பார்மால்டிஹைட்" என்னும் பொருளைக் கரிவாயு, ஹைட்ரஜன் வாயு இவைகளின் சேர்க்கையால் மின்சாரத்தின் மின்னல் தாக்குதல் மூலம் தயாரிக்க முயற்சி செய்து வருகிறோம்" என்று கூறி அது தயாரிக்கும் ஆராய்ச்சிப் பகுதிக் கூடத்துக்கு அழைத்துச் சென்றார்.

* * *

இந்தக் கூடத்துக்குள் பலவிதமான ஆராய்ச்சிக் கருவிகள் இருக்கின்றன. மின்சாரக் கம்பிகள், கண்ணாடிக் குழாய்கள், அந்தக் குழாய்களுக்குள் என்னென்னவோ ரஸாயனப் பொருள்கள் இருக்கின்றன. பார்க்கும் இடமெல்லாம் இப்படிப் பலவிதமான விசித்திரக் கருவிகள் தான் இருந்தன.

அடாடா! இந்தக் கருவிகளைக் கொண்டு தான் ரஸாயன நிபுணர்கள் என்னென்ன அதிசயங்களைச் செய்துவிடுகிறார்கள்! ஒரு பொருளிலிருந்து இன்னொரு பொருளையே உண்டாக்கிவிடுகிறார்கள். 'ஹைட்ரஸி'னும் 'பார்மால்டிஹைடு'ம் குறைந்த செலவில் தயாரித்து அதில் வெற்றியும் பெற்றுவிட்டால் அவைகக்

கொண்டு எவ்வளவோ காரியங்களைச் சாதிக்கலாம் என்றார் ஆராவமுதன். அந்தப் பொருளைக் கொண்டு என்னென்ன செய்யலாம் என்பதைவிட அதைக் குறைந்த செலவில் தயாரிக்கும் முயற்சியைப் பாராட்டி விட்டு அடுத்த கூடத்துக்குச் சென்றேன்.

“இவ்வளவு சாதாரணமாக இதைப்பற்றிக் கூறி விட்டீர்களே!” என்றார்.

“நான் என்ன ஆராய்ச்சி நிபுணரா? சாதாரண மனிதன்தானே!” என்றேன்.

“அப்படியில்லை. இதற்காக எத்தனை பேர்கள், எவ்வளவு பாடுபடுகிறோம் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டாமா?”

“தெரிந்து கொள்ள வேண்டியதுதான்.”

டாக்டர் ஏ. ஜோகராவ் என்பவர் இந்த ஆராய்ச்சிக் கூடம் ஆரம்ப காலத்திலிருந்து திட்ட ஆபீஸராகவும், திட்ட உதவி டைரக்டராகவும் சிறந்த முறையில் பணியாற்றி வருகிறார். இப்பொழுது ஆராய்ச்சியில் ஒரு பகுதிக்கு உதவி டைரக்டராக இருந்து வருகிறார். அவருடன் ஒரு நிர்வாக அதிகாரியும், நான்கு உயர்தர விஞ்ஞான அதிகாரிகளும், மூன்று துணை விஞ்ஞான அதிகாரிகளும், இன்னும் பயிற்றப்பட்ட உதவி ஆராய்ச்சியாளர்கள், இஞ்சினியர்கள், மெக்கானிக்குகள் எல்லோரும் வேலை பார்த்து வருகிறார்கள்.

ஒரே வகையான பொருளைப் பல மருந்துகளின் சேர்க்கையாலும், பிரிவாலும், உஷ்ணத்தைத் தக்கபடி கொடுத்தும், எடுத்தும் தயார் செய்யலாம். மின்சார சக்தியை உபயோகித்தும் தயார் செய்யலாம். ஆனால், மின்சார சக்தியின் மூலம் தயாரிக்கும் பொருள்கள் பொதுவாக சுத்தமானவையும், விலை குறைவானதாயும் இருக்கின்றன. இந்த முறையில் ஆராய்ச்சி செய்து வெற்றி

உபயோகித்தும், நவசாரத்துக்குப் பதிலாகச் சாதாரண உப்பைச் சேர்த்தும் ஒரு பாட்டரி இங்கு கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது.

இந்தப் பாட்டரிகளைப் பல இடங்களில் பத்துப் பன்னிரண்டு மாதங்கள் வைத்துச் சோதனை செய்து பார்த்து அதில் திருப்தி அடைந்திருக்கிறார்கள். ரயில் வண்டிகளிலும், தந்தி காரியாலயங்களிலும், பஸ்களிலும், மோட்டார்களிலும் உபயோகப்படுத்திப் பார்த்து அதில் நல்ல வெற்றி கண்டுவிட்டார்கள்.

பஸ்களிலும் கார்களிலும் உபயோகப்படுத்தப்படும் பாட்டரிகள் காலப்போக்கில் தகுதியற்றவைகளாகி விடுகின்றன. அவ்வாறு கெட்டுப் போன பாட்டரிகளைக் குப்பையில் எறிந்துவிடுவார்கள். ஆனால் அந்தப் பாட்டரியில் உள்ள காரீயமும், அண்டிமனி (Antimony) என்னும் உலோகமும் குப்பையோடு குப்பையாய் இதுவரை போய்க் கொண்டு வந்தது. அந்தக் குப்பைப் பொருளான உபயோகமற்ற மோட்டார் பாட்டரியில் இருக்கும் காரீயத்தையும், அண்டிமனி உலோகத்தையும் மின்சார ரஸாயன முறையில் அதிக செலவில்லாமல் பிரித்தெடுக்கும் அதிசய முறையைக் கண்டு பிடித்திருக்கின்றனர். இவ்வாறு பிரித்தெடுக்கப்பட்ட காரீயத்தையும், அண்டிமனியையும் கொண்டு தயாரித்த பாட்டரிகள் நன்றாக உழைப்பதுடன், புதிய பாட்டரிகளைப் போலவே அதன் தரத்திலும் உயர்வாக இருக்கின்றன.

இந்தியாவில் காரீயத் தாதுப் பொருளும், அண்டிமனி தாதுப் பொருளும் அதிகம் இல்லை. ஆகையால் பழைய பாட்டரியிலிருந்து இந்தப் பொருள்களைப் பிரித்தெடுப்பது மிகவும் லாபம் அளிக்கக் கூடும் என்பதைப் பல தொழில் நிபுணர்கள் உணரத் தொடங்கியிருக்கின்றனர். அதனால் பெரிய அளவில் சோதனை நடத்தும்படி கேட்டிருக்கின்றனர்.

முறையில் காஸ்டிக் சோடாவாகவும், கந்தக அமிலமாகவும் மாற்றும் வழிகளைக்குறித்தே இங்கு ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றன. இந்தியாவில் சாதாரண உப்பிலிருந்து மின்சார முறையில் காஸ்டிக் சோடா தயாரிக்கும்போது உண்டாகும் குளோரின் வாயு தேவைக்குமேல் உற்பத்தியாவதாலும், இந்தியாவில் உள்ள கந்தகத் தாதுப் பொருள்களில் இருந்து இன்னும் கந்தகத் திராவகம் எடுக்கவில்லை என்ற காரணத்தினாலும் மேலே சொன்ன மின்சார முறையான ஆராய்ச்சி மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது.

“அடேயப்பா! என்ன ஆராய்ச்சிகள். தலையைச் சுற்றுகிறதே!”

“இது மட்டும்தானா? இன்னும் பாருங்கள்” என்று இன்னும் பல ஆராய்ச்சிப் பகுதிகளுக்குள் அழைத்துச் சென்றார் ஆராய்ச்சி நிபுணர்.

இன்றுவரை நாம் நிக்கல், தாமிரம், வெள்ளீயம், குரோமியம், வெள்ளி, தங்கம் முதலிய மூலாம் பூசும் மருந்துகளை வெளிநாடுகளில் இருந்து வாங்கி உபயோகித்து வருகிறோம். இந்த மருந்துகளை இந்தியாவிலேயே தயாரிப்பதற்குக் காரைக்குடியில் ஆராய்ச்சி நடைபெறுகிறது. குறைந்த செலவில் சயனைட் கலப்பில்லாமல் தயார் செய்வதற்கு வேண்டிய முறைகளை ஆராய்ந்து வருகிறார்கள்.

இதோ இன்னும் சில அதிசயமான ரஸாயன ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றன.

ரயில், மோட்டார் இன்ஜின்களில் உள்ள பிஸ்டன் வளையங்கள் அடிக்கடி தேய்ந்து போகின்றன. இதனால் நமது சர்க்காருக்கு எத்தனையோ லட்சம் ரூபாய்கள் செலவாகிறது. இந்தச் செலவைக் குறைத்து மேற்படி இன்ஜின் பிஸ்டன் வளையங்களை நீடித்து உழைப்பதற்கு

# 3. அழகப்பா பொறி இயற் கல்லூரி

உலகத்தில் இல்லாத ஒரு அதிசயம் நமது நாட்டில் நடைபெற்று வருகிறது. சென்னை ராஜ்யத்தில் இருந்து ஒரு தகுதி வாய்ந்த இளைஞன் இங்கிலாந்துக்குச் சென்று மேல் படிப்பு படிக்க விரும்பினால் அவனுக்கு அங்கு தாராளமாக இடம் கிடைத்து விடுகிறது. உலகப் புகழ் பெற்ற ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் போன்ற சர்வகலா சாலைகளிலும் இடம் கிடைத்து விடுகிறது. ஆஸ்திரியாவில் பயிற்சிக்கும் இடம் கிடைத்துவிடுகிறது.

இங்கிலாந்தில் படிப்பதற்கு இடம் கிடைப்பது போலவே அமெரிக்காவிலும் கிடைத்துவிடுகிறது. அந்த நாடுகளில் உள்ள எந்த சர்வகலாசாலையிலும் இந்திய மாணுக்கர்கள் இடம் சம்பாதித்துக் கொள்ளலாம்.

ஆனல், சென்னை மாகாணத்தில் பிறந்த இளைஞன் ஒருவன் சென்னை இஞ்சினீயரிங் கல்லூரியிலோ, மருத்துவக் கல்லூரியிலோ இடம் பெறுதல் அரிது ! இந்த உலகில் மானிடராய்ப் பிறத்தலையும் விட மிக அரிது !

காலேஜில் இண்டர்மீடியட் என்னும் இடை வகுப்பில் தேறிய மாணுக்கர்கள் முதலில் இஞ்சினீயரிங் கல்லூரியிலோ மருத்துவக் கல்லூரியிலோ இடம் தேடுவார்கள். இவர்களோடு போட்டி போட்டுக்கொண்டு பி. ஏ. பட்டம் பெற்றவர்களும் அங்கு வந்து விடுவார்கள்.

இண்டர்மீடியட் தேறிய மாணுக்கனுயிருந்தாலும் பி. ஏ. தேறிய மாணுக்கனுயிருந்தாலும் பொறியியல் கல்லூரிகளிலே அவ்வளவு சுலபமாக இடம் பெற்றுவிட முடியாது.

சாதி, குலம், மதம், இல்லை ஆகிய அதிசயமான பல பரீட்சைகளிலும், அபூர்வமான பல சோதனைகளிலும் அந்த மாணுக்கர்கள் தேறியாக வேண்டும் !!!

ஆலயங்களில் இல்லாத சாதி வேற்றுமை, ஹோட்டல்களில் இல்லாத சாதி வேற்றுமை, பொது வாழ்வில் இல்லாத சாதி வேற்றுமை அறிவை வளர்க்கும் கல்வி ஸ்தாபனங்களில் மட்டும் இருந்து வருகிறது. இந்தச் சாதி வித்தியாசம் தொலைய வேண்டாமா? அதற்கு என்ன செய்வது?

உடனடியாக ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு இன்ஜினியரிங் கல்லூரியையும் மருத்துவக் கல்லூரியையும் ஆரம்பித்துவிட வேண்டியதுதான் சிறந்த வழி. இதற்குச் சர்க்கார்தான் உதவி செய்யவேண்டும் என்பதில்லை. ஈகைக் குணம் படைத்த மனிதர்களும் செய்யலாம். சமூகத் தலைவர்களும் செய்யலாம்.

இந்த நாட்டிலிருந்து சாதிப் பேய் ஓடவேண்டும் எல்லாரும் அறிவு பெற்றவர்களாய் விளங்க வேண்டும் மக்கள் வெறும் கலைக் கல்வி கற்றால் மட்டும் போதாது. தொழிற் கல்வியும் பயிலவேண்டும். அதுதான் மிகவும் அவசியம். உழைப்பின் மூலமாகத்தான் ஒரு மனிதனும் அவன் வாழும் நாடும் உயர முடியும் என்பதை நாம் நன்கு அறிவோம். ஆனால், யாரும் காரியத்தில்தான் செய்வதில்லை. செய்ய முயலுபவர்களுக்கும் இந்த நாட்டில் நல்ல ஆதரவு கிடைப்பதில்லை.

ஆனாலும், இப்படி எத்தனையோ இடையூறுகள் இருந்தாலும் அத்தனைக்கும் மத்தியில் இந்த நாட்டிலிருந்து சாதிப் பேய் ஒழிந்து கல்வி ஸ்தாபனங்கள் உயர வேண்டும் என்பதை உணர்ந்த உத்தமர் ஒருவர் இருக்கிறார். அவர்தான் கோட்டையூர் வள்ளல் என்று புகழ் பெற்ற டாக்டர் அழகப்பர் அவர்கள். அந்தத் தர்மசீலர் காரைக்குடியில் பொறி இயல் கல்லூரி ஆரம்பித்தார். அது மிகச் சிறந்த முறையில் நடந்து வருகிறது.

*        *        *

சென்னை ராஜதானியிலே முதன் மாணவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். மற்ற மாணவர்கள் எல்லாம் நல்ல மார்க்குகள் பெற்றிருக்கின்றனர். இதைப் பார்த்து இந்தியாவில் உள்ள அத்தனை இன்ஜினீயரிங் கல்லூரிகளும் பெருமைப்படலாம். தமிழ் மக்கள் இதை எண்ணி எண்ணித் தலைநிமிர்ந்து நடக்கலாம்.

இந்த விபரங்களை எல்லாம் அழகப்பா பொறி இயற் கல்லூரியின் பிரின்ஸ்பல் திரு டி. எஸ். வெங்கண்ணா பி. எஸ்ஸி., பி. இ., எம். ஐ. இ. அவர்கள் மிகுந்த பெருமிதத்துடனும் உற்சாகத்துடனும் கூறினார்.

அழகப்பா பொறிஇயற் கல்லூரி ஆரம்பித்து மூன்று ஆண்டுகள்தான் ஆனபொழுதிலும் அதில் நூறு வருஷங்களாக நடைபெற்றுவரும் இன்ஜினீயரிங் கல்லூரிகளில் இருப்பது போன்ற ஏராளமான இயந்திர சாதனங்கள் இருக்கின்றன. நவீன வசதியுடன் கூடிய இயந்திரங்களும், இதர இன்ஜினீயரிங் கருவிகளும் இருக்கின்றன.

“ இந்தக் கருவிகள் எல்லாம் எவ்வளவு ரூபாய் மதிப்பு இருக்கும் ?”

“ சுமார் இருபது லட்ச ரூபாய் மதிப்பு இருக்கும். இன்னும் பல லட்ச ரூபாய்கள் அதற்கு இயந்திரச் சாமான்கள் வரவழைப்பதற்கான ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருக்கிறது ” என்று பதில் கிடைத்தது.

திரு வெங்கண்ணாவிடம் இன்னும் பல விஷயங்களைப் பற்றி விசாரித்தேன். “ உழைப்புத்தான் செல்வம் ” என்பது இந்தப் பொறி இயல் கல்லூரியில் அஸ்திவாரம் என்று கூறினார். இந்தக் கல்லூரியை ஆரம்பித்த திரு அழகப்பரின் சித்தாந்தமும் அதுதான். உழைப்புச் சக்தியின் மீது அவருக்கு எல்லையற்ற மோகம். தம்மைப் போலவே எல்லோரும் உழைக்க மாட்டேன் என்கிறார்களே என்று அவருக்குப் பலர்மீது

அளவற்ற கோபம். அது மட்டுமல்ல, திரு அழகப்பருக்கு இன்னும் பல கோபங்களும் உண்டு என்று அறிந்தேன். அவர் நினைக்கிறபடி கலாசாலை வளர்ச்சிக்கு உதவி புரியாதவர்கள் மீது கோபம். எதிர்பார்க்கும் அளவுக்குக் கல்லூரிகளில் அவருடன் ஒத்துழைக்காத கல்லூரி நிர்வாகிகளிடம் கோபம். இந்தக் கோபத்தின் காரணமாக எல்லாக் காரியத்தையும் தாமே கவனிக்கலாம் என்றால் அவருடைய உடல் நிலை அவருடன் ஒத்துழைக்க மறுக்கிறது. அதை எண்ணும்பொழுது அவருக்குப் பல சமயங்களில் அவர் மீது கோபம் கோபமாக வரும்.

அழகப்பரின் கோபங்கள் எல்லாம் சேர்ந்து கலாசாலையின் லாபங்களாக மாறிவிடுகின்றன. அழகப்பர் மேலும் மேலும் நன்றாகக் கோபப்படட்டும். அதன் பயனாக அவருடைய கலாசாலைகள் மேலும் மேலும் பயன் பெறட்டும் என்று எண்ணம் கொண்டேன்.

இந்திய சர்க்காருக்கு ஏதாவது கஷ்டம் எழுந்திருந்தால் அதனால் தாமதம் ஏற்பட்டிருக்கும் என்று, கஷ்டத்தைத் தான் தாமே நேரில் டில்லிக்குச் சென்று வந்தாராம்.

*　　　　　　　　*

வியப்பு தரக்கூடிய ஒரு ரஸமான சம்பவம் கேள்விப்பட்டேன்.

காரைக்குடியில் மின்சார ரசாயன ஆராய்ச்சிக்கூடம் ஒன்று நிறுவுவதற்காக நிலமும், பணமும் நன்கொடை அளிப்பதற்குச் சென்னையிலிருந்து விசேஷ விமானத்தில் டாக்டர் அழகப்பர் டில்லிக்குப் பறந்தாராம். அன்று இரவு பன்னிரண்டு மணிக்குப் பாரதத்தின் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவை நேரில் பார்த்து மேற்படி ஸ்தாபனத்துக்கான நன்கொடையை ஏற்றுக் கொள்ளும்படி செய்து மின்சார ரசாயன நிலையத்தைக் காரைக்குடியில் ஆரம்பித்தாராம். நன்கொடை கொடுப்

பதில்கூட டாக்டர் அழகப்பருக்கு அவசரம்! சும்மாவா சொன்னார் பொய்யாமொழிப் புலவர்?

"ஞாலம் கருதினும் கைகூடும காலம்
கருதி இடத்தான் செயின்"

என்றல்லவா சொல்லியிருக்கிறார்!

இவ்வாறு அதிசயமான சாதனைகள் புரிந்து வரும் அழகப்பரின் பொறி இயற் கல்லூரியிலிருந்து இன்னும் நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான அழகப்பர்கள் தோன்றி இந்தச் செந்தமிழ் நாட்டைச் செழிப்புள்ள நாடாக மாற்றவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

### பொறி இயற் கழக பிரின்ஸிபல்

அழகப்பா பொறி இயற் கழக பிரின்ஸிபல் திரு டி. எஸ். வெங்கண்ணா அவர்கள் மைசூர் ராஜ்யத்தைச் சேர்ந்தவர். மைசூர் சர்க்காரில் பிரதம இன்ஜினியராகப் பணியாற்றியவர். மைசூரில் உள்ள நீர்வளத்தை உபயோகிப்பதற்கு அருமையான யோசனைகள் கூறியவர். இவர் மைசூர் ராஜ்யத்தின் உயர்வுக்குப் பல காலம் தொண்டாற்றிவிட்டு ஐந்து ஆண்டுகளுக்கு முன்தான் ஓய்வு பெற்றார்.

அவர் ஓய்வு பெற்றதை அறிந்தவுடனேயே ஏதோ தமக்காகத்தான் அவருக்கு மைசூர் சர்க்கார் ஓய்வு கொடுத்ததாக எண்ணி அழகப்பா பொறி இயற் கல்லூரிக்கு பிரின்ஸிபலாக இருக்கும்படி செய்து விட்டார் டாக்டர் அழகப்பர். திறமையைத் தேடிச் சென்று அதற்கு மதிப்பு அளிக்கும் வழக்கம் டாக்டர் அழகப்பரிடம் இயற்கையிலேயே இருந்தது. இந்த மாதிரி எண்ணம் மற்றெல்லாத் துறைகளிலும் உள்ள அதிகாரிகளுக்கு ஏற்பட்டால் நாடு நலம் பெறுவதற்கு நல்ல வழி பிறக்கும்.

திரு வெங்கண்ணா தம்முடைய நீண்ட கால அனுபவத்தை அழகப்பா பொறி இயற் கல்லூரியின் வளர்ச்சிக்காக உபயோகித்து வருகிறார். "ஏட்டுக் கல்வி மக்களுக்குப் பயன்படாது. உடல் உழைப்புடன் கூடிய தொழிற் கல்விதான் மக்களை உயர்த்தக் கூடியது" என்பதை நன்கு உணர்ந்திருக்கிறார்.

அதனால் அங்குள்ள மாணவர்களை உடல் உழைப்புக்குத் தயார் செய்து வருகிறார். மாணவர்களைத் தேச பக்தியிலும், திறமையிலும், கட்டுப்பாட்டிலும், கடமை உணர்ச்சியிலும் சிறந்தவர்களாக மாற்றி வருகிறார்.

இந்த விஷயங்களைப் பற்றி யெல்லாம் பிரின்ஸிபால் திரு வெங்கண்ணாவிடம் பேசிக்கொண்டே பொறி இயற் கல்லூரியின் பல பகுதிகளையும் பார்த்து வந்தோம். சுமார் இருநூற்று ஐம்பது வகையான இன்ஜினீயரிங் தளவாடச் சாமான்களின் பெயர்களையும், அதன் அவசியத்தையும் பற்றி அவர் விளக்கிக் கூறியபோது எனக்குத் தலையைச் சுற்ற ஆரம்பித்துவிட்டது. அடடா! பொறி இயற் கலை என்பது எவ்வளவு பெரியது. எவ்வளவு நுணுக்கமானது என்பதை உணர்ந்துகொள்ள முடிந்தது.

*　　　*　　　*

இன்னும் அங்குள்ள தொழிற்கூடங்களை யெல்லாம் பார்த்தபோது இவையெல்லாம் நிறுவி நாலு ஆண்டுகள் தான் ஆகின்றன என்பதை என்னால் நம்பவே முடியவில்லை. அவ்வளவு அற்புதமாக இருந்தன தொழிற் கூடங்களின் தோற்றமும் அமைப்பும்.

தச்சுப் பட்டறை, கொல்லுப் பட்டறை, இரும்பை உருக்கி இயந்திரங்களை வார்க்கும் கூடம், இயந்திரக் கூடம், இவைகளுக்கெல்லாம் வேண்டிய ஏராளமான சாமான்கள் சேகரித்து வைத்திருக்கும் பண்டகசாலை இவைகளை எல்லாம் பார்க்கும்போது நான் இந்த

உலகத்திலேயே இல்லை. மனித நடமாட்டமே இல்லாத இயந்திர உலகில் இருப்பது போன்ற பிரமைதான் ஏற்பட்டது. ஒவ்வொரு பகுதியிலும் அதிசயமும் அற்புதமும் நிறைந்து இருக்கின்றன.

இந்த இடங்களுக்கெல்லாம் என்னை அழைத்துக் கொண்டு வந்து காண்பித்தார் பிரின்ஸ்பல் திரு வெங்கண்ணா.

“இன்னும் ஏதாவது பார்க்க வேண்டுமா?”

“என்னென்ன பார்க்க வேண்டும் என்பதை நீங்கள்தானே கூற வேண்டும்?” என்றேன்.

“இன்ஜினியரிங் கல்லூரிக்குத் துணை புரியும் “பாலிடெக்னிக்” கலாசாலையையும் பார்த்துவிட வேண்டும்” என்றார்.

“பாலிடெக்னிக்கா? அப்படி என்றால்?”

“பட்டப் படிப்புப் பெறாத மாணவர்கள் தொழில் பயிலும் இடம். வெறும் இன்ஜினியர்கள் மட்டும் இருந்துவிட்டால் போதுமா? அவர்களுக்குத் துணை புரியும் தொழில் நிபுணர்களும் வேண்டாமா? அப்படிப் பட்ட தொழில் நிபுணர்களைத் தயாரிக்கும் இடம்தான் பாலிடெக்னிக்” என்று கூறிவிட்டு அந்தப் பகுதிக்கு அழைத்துப் போகும்படி அங்கிருந்த அதிகாரிக்கு உத்தரவிட்டார்.

பொறியியற் கல்லூரி பிரின்ஸ்பல் திரு வெங்கண்ணாவிடம் விடை பெற்றுக்கொண்டு ‘பாலி டெக்னிக்’ பகுதிக்குச் சென்றேன்.

அழகப்பா பாலிடெக்னிக் பகுதியையும், இதர கல்லூரிகளையும் பார்க்கலாம்.

# 4. பொறி இயற் கலை வளருகிறது

அந்த ஊரில் உள்ள ஆற்றங்கரை விநாயகருக்கு யார் நூற்றெட்டுக் குடம் தண்ணீர் எடுத்து அபிஷேகம் செய்கிறாரோ, அவர் மகாராஜாவாக விளங்குவார் என்று ஜோஸியர்கள் சொல்லி வந்தார்கள். ஆனால், ஜோஸியர் கூறியதை யாரும் நம்பவில்லை. கஷ்டப்பட்டு நூற்றெட்டுக் குடம் தண்ணீர் எடுத்து அபிஷேகம் செய்து விட்டுப் பிறகு ஏமாந்து போவதற்கு அவர்களில் யாரும் விரும்பவில்லை.

ஆனால், ஒருவர் மட்டும் தாம் மகாராஜாவாக ஆக வேண்டும் என்னும் ஆசையினால் தேக சிரமத்தையும் பாராமல் ஆற்றங்கரைப் பிள்ளையாருக்கு அபிஷேகம் செய்வதற்கு முன் வந்தார்.

ஒன்று, பத்து, முப்பது, ஐம்பது என்று நூற்று ஏழு குடம் தண்ணீர் விநாயகப் பெருமானுக்கு, அவர் மனம் குளிர அபிஷேகம் செய்தாகிவிட்டது.

கடைசியில் ஓரே ஒரு குடம்தான் பாக்கி. அபிஷேகம் செய்தவர் அரசனாவதற்கு வேண்டிய அறிகுறி எதுவும் தோன்றவில்லை. கஷ்டப்பட்டதற்கு பலன் இல்லாமல் போய்விட்டதே என்ற ஏமாற்றம் ஏற்பட்டுவிட்டது.

அதனால் அவர் மிகுந்த ஆத்திரத்துடன் நூற்றெட்டாவது குடத்தைப் பிள்ளையார் தலையில் போட்டு உடைத்தார்.

அவ்வளவுதான்! சிரமம் எடுத்துக்கொண்டு அபிஷேகம் செய்தவர் ஏமாறவில்லை. பிள்ளையார் பிரத்தியட்சமானார்.

"நீ மகாராஜாவாக ஆகக் கடவாய்!" என்று வரம் தந்தார்.

அபிஷேகம் செய்தவர் நம்ப முடியாத அந்த அற்புதக் காட்சியைக் கண்டு, விநாயகர் தந்த வரத்தைக் கேட்டு ஆச்சரியத்தில் மூழ்கிப் போனார்.

“ஆனால், நூற்றெட்டாவது குடத்தை என் தலையில் போட்டு உடைத்ததால் என் முடிக்கு எவ்வித ஆபத்துமில்லை. உன் முடியையே நீ நொறுக்கிக் கொண்டாய். ஒரு காலத்தில் நீ மாத்திரம் அல்ல, இந்த உலகில் தோன்றும் மகாராஜாக்கள் எல்லாருமே முடி இழந்து விடுவார்கள்” என்று ஆற்றங்கரைப் பிள்ளையார் திருவாய்மலர்ந்து சாபம் கொடுத்துவிட்டு மறைந்தார்.

பிள்ளையாரின் சாபம் பலித்துவிட்டது! பாரதத்தில் இருந்த அறுநூறுக்கு மேற்பட்ட ராஜாக்கள் முடி இழந்தார்கள். இந்திய நாடு சுதந்திரம் பெற்றது. எல்லோரும் இந்த நாட்டு மந்திரிகளாகும் தகுதியைப் பெற்றுவிட்டார்கள். மந்திரிகள் எல்லோரும் கூடித் திட்டங்கள் வகுத்துப் பாரத தேசத்தின் இயற்கை வளத்தைப் பெருக்கவும் தொழில் வளம் சிறக்கவும் பாடுபட்டு வருகிறார்கள். தொழிற் கல்லூரிகளைத் திறக்கிறார்கள். தொழில் நிபுணர்களை வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்கிறார்கள். இதெல்லாம் போதவில்லை. தனி நபர்களின் ஊக்கத்தாலும் முயற்சியினாலும் தொடங்கப்படும் பலப்பல தொழிற் கல்லூரிகளும் நாட்டுக்குத் தேவைப்படுகின்றன. பிள்ளையார் தலையில் தண்ணீர்க் குடத்தை உடைத்த மகாராஜன் திருநாமம் நீடூழி வாழட்டும். அவனால் அல்லவோ இவ்வளவு மாறுதல்களும் முன்னேற்றங்களும் இந்தியாவில் நிகழ்ந்து வருகின்றன!

அதனால் அல்லவோ டாக்டர் அழகப்பர் காரைக்குடியில் மிகப் பெரிய கல்வி ஸ்தாபனம் அமைத்து அதன் மூலம் இந்த நாட்டு மக்களை அறிவிலும் ஆற்றலிலும் தகுதி உள்ளவர்களாக மாற்றி வருகிறார்?

அவருடைய பொறி இயற் கல்லூரியைப் பார்த்து விட்டுப் பாலிடெக்னிக் கலாசாலைக்குக் கிளம்பினோம். அழகப்பா பொறி இயற் கல்லூரிக்குச் சமீபத்திலேயே பாலிடெக்னிக் கலாசாலையின் பெரிய கட்டடம் இருக்கிறது.

"இதுதான் பாலிடெக்னிக் கலாசாலை" என்றார் என்னுடன் வந்த அதிகாரி.

அழகப்பா பாலிடெக்னிக் கலாசாலைக்குள் போவதற்கு முன்னால் இந்த உலகில் பொறி இயற் கலை வளர்ந்த அதிசயமான வரலாற்றைச் சிறிது நினைவு படுத்திக் கொள்வோம்.

## பொறி இயலின் கதை

ஆதி மனிதன் காட்டிலும், மேட்டிலும் வாழ்ந்து ஒவ்வொரு கணமும் மிகுந்த ஆபத்தான வாழ்க்கையைத் தான் நடத்தி வந்தான். ஏதோ சந்தர்ப்பவசத்தால் கிடைக்கும் ஆகாரத்தைப் புசித்து வந்தான். ஆடு, மாடுகள், பறவைகள் இன்னும் பலவகையான மிருகங்கள் முதலியவைகளுடன் காட்டு மரங்களின் இலைகளையும், கிழங்குகளையும்தான் நம்பி வாழ்ந்து வந்தான். காற்றுக்குப் பின் மிக அவசியமான குடி தண்ணீர் சில இடங்களில்தான் இருந்தது. அப்படி நல்ல தண்ணீர் ஓடிய ஆற்றின் கரையில் ஆதி மனிதர்கள் கூட்டமாக வாழ்ந்து வந்தார்கள். பெரிய மரங்களின் கிளைகளிலும், மலைக் குகைகளிலும் மன அமைதி இல்லாமல் மிகுந்த பயத்துடன் வசித்து வந்தார்கள். காலப்போக்கில் எப்படியோ தங்கள் கைகளை உபயோகிக்கக் கற்றுக்கொண்டார்கள்.

மனிதன் எங்கேயாவது அதிக நாள் வசித்து வந்தான் என்று சொல்ல முடியாது. காரணம் அவனுக்கு ஒரே இடத்தில் ஆகாரம் கிடைப்பதில்லை. அதனால் ஆகாரப்

கிடைக்கும் இடங்களைத் தேடித் தேடி அலைந்தான். ஆகாரம் கிடைத்தால் சீதோஷ்ணம் ஒத்து வராது. சீதோஷ்ணம் ஒத்து வந்தால் ஆகாரம் கிடைப்பதில்லை. இவ்வாறு இயற்கையுடன் போராடிச் சிறுகச் சிறுக சீதோஷ்ண நிலைமைக்கு ஏற்றவண்ணம் ஒரே இடத்தில் வாழுவதற்குத் தன்னைப் பழக்கிக் கொண்டான்.

பல நூற்றாண்டுகளுக்குப் பின்தான் தீயின் சக்தியைப் புரிந்துகொண்டு அதைத் தன் வாழ்க்கைக்குச் சௌகரியமாக உபயோகிக்கத் தெரிந்து கொண்டான். பிறகு உணவுப் பயிர்கள் வளர்ப்பதற்கும், அதற்குத் தண்ணீர் பாய்ச்சவும் பயின்றான். மிருகங்களைப் பழக்கி அதன் சக்தியை உபயோகிக்கத் தெரிந்துகொண்டான். வண்டிகள் செய்து அதில் மிருகத்தைப் பூட்டி ஓட்டினான். தரையில் வண்டி விட ஆரம்பித்தது போலத் தண்ணீரில் கட்டு மரம் கட்டிவிட்டான். பிறகு தோணியைக் கண்டுபிடித்தான். அது பாய் மரமாக, கப்பலாக வளர்ந்தது. இந்த வளர்ச்சிக்குப் பிறகுதான் உணவுகளைச் சேமித்து வைத்துக் கொண்டு உணவுக் கஷ்டம் இல்லாமல் வாழத் தெரிந்துகொண்டான். இதனால் மனிதனின் வாழ்வும் உயர்ந்தது.

இவ்வாறு வாழ்க்கையை உயர்த்திய முதல் மனிதன் தான் ஆதி பொறி இயல் நிபுணன்; இன்ஜினீயர். கையில் கல்லை எடுத்து எறிந்த மனிதன், அதைக் கவண் கயிற்றில் வைத்து இன்னும் வேகமாக எறியக் கண்டு பிடித்தான். அந்தக் கவண் கயிற்றைக் கண்டுபிடித்தவன் தான் முதல் இன்ஜினீயர். ஈட்டி, வில், வேல், வாள் முதலிய ஆயுதங்களைக் கண்டவர்கள் ஆதி பொறி இயல் நிபுணர்கள்.

**பழையகாலப் பொறி இயல்**

எகிப்து நகரில்தான் பொறி இயல் நல்ல முறையில் வளர்ந்து வளம் பெற்றிருக்கிறது. கல்லே இல்லாத

திறந்த வெளியில் எத்தனையோ மைல்களுக்கு அப்பாலிருந்து கற்களைக் கொண்டு வந்து கற்பனை செய்து காண முடியாதபடி 'பிரமிட்'கள் கட்டியிருக்கிறார்கள். இதை நிர்மாணித்தவர்கள் எவ்வளவு பெரிய இன்ஜினியர்களாக இருந்திருக்க வேண்டும்? சீனப் பெருஞ் சுவரை எத்தனை லட்சம் மக்கள் கட்டியிருக்க வேண்டும்! ஒரு மைல் நீளமா? இரண்டு மைல் நீளமா? நூறு மைல்களா? இருநூறு மைல்களா? இரண்டாயிரத்து ஐந்நூறு மைல் நீளம் அல்லவா? அந்தப் பெருஞ் சுவர் இன்னும் அழியாமல் இருக்கிறதே! ஆகா! எப்பேர்ப்பட்ட பொறி இயல் சாதனை! பாபிலோன் நகரில் உள்ள தொங்கும் தோட்டம் அதிசயமான பொறி இயல் கலையின் சிகரமாக விளங்குகிறது. இத்தாலிய நாட்டில் இருக்கும் பைசா கோபுரம், நமது நாட்டில் உள்ள விண் மறைக்கும் கோயில்கள், ஒரே கல்லில் குடைந்தெடுத்த மாபெரும் ரதங்கள், இன்னும் பர்மா, சயாம் முதலிய இடங்களில் உள்ள ஆலயங்கள் எல்லாம் பழைய இன்ஜினியரிங் கலையின் சிறப்புக்கு இன்றும் எடுத்துக்காட்டாக நிற்கின்றன.

அங்கோர் வாட் என்னும் இடத்தில் உள்ள அரண்மனைக் கட்டடங்கள் அபூர்வமான இன்ஜினியரிங் சாதனைகள். சுண்ணாம்பும், சிமெண்டும் இன்றியே ஒரு கல்லை இன்னொரு கல்மேல் பொருத்தி இணையற்ற முறையில் அழகுமிக்க அரண்மனைகளைக் கட்டியிருக்கிறார்கள். ஒரு கல்லுக்கு மேல் இன்னொரு கல்லை அமைத்திருக்கும் விந்தையைப் பார்த்துப் பொறி இயல் உலகமே வியக்கிறது. கிரேக்கர்கள், ரோமானியர்கள் அந்தக் காலத்தில் போட்ட சாலைகள் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னும் அழிவில்லாமல் உபயோகத்தில் இருக்கின்றன. தமிழகத்தில் ராஜராஜன் காலத்தில் காவேரியில் கட்டிய கல் அணை, சிதம்பரத்துக்கு அருகில் உள்ள வீர நாராயண ஏரி எல்லாம்

வியக்கத்தக்க பொறி இயல் சாதனைகள். இவை யாவும் நவீன இன்ஜினியரிங் உலகம் பார்த்துப் பார்த்து மலைக்கும் அபூர்வமான பொறி இயல் அதிசயங்கள்.

**நவீன பொறி இயல்**

1700-ம் ஆண்டிற்குப் பின்தான் இயந்திரங்களை இயக்கும் பொறி இயற் கலையை மனிதன் பயின்றான். பொறி இயற் கலை உயர்ந்து வளர ஆரம்பித்துவிட்டது. 1869-ம் ஆண்டிற்குப் பின் நிலக்கரியை உபயோகித்து, நீராவியை உண்டாக்கி அதன் சக்தியால் இயந்திரங்களை இயக்க ஆரம்பித்தனர். இயந்திரப் பொறி இயல் கலைகள் வளர்ந்தன. தொழிற்சாலைகள் பெருகின. மக்கள் சுக வாழ்வு வாழ ஆரம்பித்தனர். மக்கள் சமுதாயம் வேகமாக உயரத் தொடங்கியது.

இதுவரை இருந்து வந்த சாலைகளை அமைக்கும் பொறி இயல், கட்டடம் கட்டும் பொறி இயலுடன் இயந்திரங்களை இயக்கும் பொறி இயற் கலையும் சேர்ந்து வளரத் தொடங்கின. 1831-ம் ஆண்டு மின்சார சக்தியைக் கண்டுபிடித்தார் மைக்கேல் பாரடே என்னும் நிபுணர். அதற்குப் பின்னர் மின்சாரப் பொறி இயல் கலையும் சேர்ந்து பொறி இயற் கலை மேலும் மேலும் ஓங்கி வளர்ந்து வளம் பெற்றுவிட்டது.

புதுப் புது விஞ்ஞானிகள் தோன்றிப் புதிய புதிய விஷயங்களைக் கண்டுபிடிக்கும்போது புதுப் புது பொறி இயற் கலைகள் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. பொறி இயற் கலைகளில்தான் எத்தனை எத்தனை வகைகள் !

இயற்கை வளங்களை எடுத்து ஆளுவதற்கான இன்ஜினியரிங் கலைகள், நிலக்கரி எடுக்கும் கலை, கல் எண்ணெயைக் கண்டுபிடிக்கும் கலை, இரும்புத் தாதுக்களும் இன்னும் பல உபயோகமான கனி வளங்களையும் கண்டு பிடிக்கும் பொறி இயல்.

விண்ணை முட்டும் கட்டடம் கட்டும் கலை, பிரம்மாண்டப் பெரியசாலைகள் அமைக்கும் கலை, தண்ணீரின் சக்தியைப் பிடித்து உபயோகிக்கும் கலை, சுகாதாரப் பொறி இயல், மின்சாரப் பொறி இயல், செய்திகளை ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு அனுப்பும் அதிசயப் பொறி இயல், இயந்திரக் கலை, விமானப் பொறி இயல், மோட்டார்ப் பொறி இயற் கலை, ரஸாயனப் பொறி இயல், விவசாயப் பொறி இயல், கப்பல் கட்டும் பொறி இயல், ராணுவப் பொறி இயற் கலை இப்படி இன்னும் எத்தனையோ பொறி இயற் கலைகள் இருக்கின்றன.

இந்தியாவில் இவ்வளவு பொறி இயலுக்கும் வேண்டிய கல்லூரிகள் இல்லை. இருக்கும் ஒருசில பொறி இயற் கூடங்களிலும் போதிய வசதிகள் இல்லை. மேலே கூறிய அவ்வளவு இன்ஜினீயரிங் கலைகளுக்கான கல்லூரிகள் இல்லாவிட்டாலும் சமுதாய வாழ்க்கைக்கு மிக அவசியமான கட்டடம் கட்டும் கலை, சாலை அமைக்கும் கலை, இயந்திர சம்பந்தமான கலை, மின்சாரக் கலை, நீர்ச் சக்தியை இயக்கும் கலை முதலியவைகளாவது அவசியம் வேண்டும். அந்தக் கலைகளில் சிறந்த நிபுணர்களும் வேண்டும். அவர்களுக்குத் துணை புரியத் தொழில் தெரிந்தவர்களும் வேண்டும்.

அதற்காகத்தான் டாக்டர் அழகப்பர் பொறி இயல் நிபுணர் பட்டம் பெறும் பொறி இயற் கல்லூரியும், பொறி இயற் கலைப் பத்திரம் வழங்கும் பாலிடெக்னிக் கலாசாலையும் சேர்த்து நடத்திவந்திருக்கிறார்.

பொறி இயற் கலைப்பத்திரம் வழங்கும் கல்லூரிதான் பாலிடெக்னிக் என்பது. 1955-ம் ஆண்டு இக்கல்லூரியையும், 1953-ம் ஆண்டில் அழகப்பா பொறி இயற் கல்லூரியையும், பாரதத்தின் ஜனாதிபதி பாபு ராஜேந்திர பிரசாத் திறந்து வைத்தார்.

* * *

இந்தக் கல்லூரியின் பிரின்ஸ்பால் ராவ்பகதூர் லெப்டினெண்ட் கர்னல் எஸ். பால் பி.இ., எம்.ஐ.இ., அவர்கள். இவர் கிண்டி பொறி இயற் கல்லூரியின் பிரின்ஸ்பாலாக இருந்து ஓய்வு பெற்றவர். அபாரமான தொழில் ஞானம் உள்ளவர். தொழிற் கல்வி மூலம்தான் இந்த நாட்டையும், நாட்டு மக்களையும் உயர்த்த முடியும் என்ற உயர்ந்த லட்சியத்தைக் கொண்டவர். ராஜாஜி அவர்களின் கல்வித் திட்டத்தை, அதாவது சிறு வயதிலேயே தொழிற் கல்விக்கான அஸ்திவாரம் அமைக்கும் ஆரம்பக் கல்வித் திட்டத்தை வன்மையாக ஆதரிப்பவர்.

இந்தக் கல்லூரியில் ஆண்டு ஒன்றுக்கு நூறு மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். மூன்று ஆண்டுகளில் அவர்களை சிறந்த தொழில் நிபுணர்களாக்கிப் பொறி இயல் அத்தாட்சிப் பத்திரம் கொடுத்து அனுப்பி வைக்கிறார்கள். நமது நாட்டில் இது போன்ற பாலிடெக்னிக் கல்லூரிகள் ஒவ்வொரு தாலுக்காவிலும் ஒவ்வொன்று உடனே ஆரம்பிக்க வேண்டும். ஒவ்வொரு பொறி இயலுக்குமே ஒரு பாலிடெக்னிக் கலாசாலை வீதம் இருந்தால் கூட நல்லதுதான்.

* * *

செல்வம் படைத்த புண்ணியவான்கள் டாக்டர் அழகப்பரைப் போல ஆரம்பக் கல்வியிலிருந்து ஆறு கல்லூரிகள் வரை ஆரம்பித்து நடத்தாவிட்டாலும் தங்கள் தங்கள் மாவட்டத்தில் ஒரு பாலிடெக்னிக் கலாசாலையாவது நடத்த முன்வரக் கூடாதா? தமிழ் நாட்டின் உயர்வுக்காகப் பொதுநலத் தொண்டாற்றி வரும் சங்கங்கள் இருக்கின்றனவே, அவைகள் இந்தக் காரியத்தைத் துணிந்து செய்ய முன்வரக் கூடாதா?

ஐந்தாண்டுத் திட்டம், பத்தாண்டுத் திட்டம் என்றெல்லாம் நாட்டில் இருப்பதைக் காரியத்தில்

நிறைவேற்றுவதற்குத் தொழில் நிபுணர்கள் அவசியம். இப்பொழுது இருந்தே பாலிடெக்னிக் கல்லூரிகளையும் பொறி இயற் கல்லூரிகளையும் ஏற்படுத்தினால்தான் எதிர்காலத்திலாவது திட்டங்களை நிறைவேற்றலாம். ஒரே ஊரில் போட்டி போட்டுக்கொண்டு பாலிடெக்னிக் கலாசாலைகள் ஆரம்பிப்பதை விட பாலிடெக்னிக்கோ, பொறி இயற் கல்லூரியோ இல்லாத ஊர்களில் ஆரம்பித்தால் நாட்டுக்கு மிகவும் நல்லது.

டாக்டர் அழகப்பர் தமிழ் நாட்டில் மட்டுமல்லாது கேரள நாட்டிலும் ஒரு பாலிடெக்னிக் கலாசாலை நடத்தி வருகிறார். திருச்சூருக்கு எட்டு மைல்களுக்கு அப்பால் உள்ள அழகப்பா நகரில்தான் அழகப்பா பாலிடெக்னிக் கலாசாலை இருக்கிறது.

கேரள நாட்டைச் சேர்ந்தவர்கள் கெட்டிக்காரர்கள். யார் யாரிடம் என்ன என்ன திறமை இருக்கிறதோ அதைப் பயன்படுத்திக் கொள்ளத் தெரிந்தவர்கள். தங்கள் நாட்டில் ஒரு பொறி இயற் கல்லூரியும் ஆரம்பிக்கும்படி டாக்டர் அழகப்பரைக் கேட்டுக்கொண்டு வருகிறார்கள். அதற்கு வேண்டிய எல்லா உதவிகளையும் செய்வதாக உறுதி கூறி உற்சாகப்படுத்துகிறது கேரள சர்க்கார். நாட்டு நலனில் அக்கறை கொண்ட சர்க்கார் என்றால் இப்படி அல்லவா இருக்க வேண்டும்?

இந்த விவரங்களையெல்லாம் அழகப்பா பொறி இயற் கல்லூரியிலும், அழகப்பா பாலிடெக்னிக் கலாசாலையிலும் உள்ள பல பொறி இயல் நிபுணர்களுடன் அளவளாவும்போது புரிந்துகொள்ள முடிந்தது.

பாலிடெக்னிக் கலாசாலையும் அதற்குள்ளே சொல்லிக் கொடுக்கும் விஷயங்களையும் சாதாரணமாகக் கேட்டுத் தெரிந்து கொள்ள முடியாது. சுருக்கமாகச் சொன்னால் அழகப்பா பொறி இயற் கல்லூரியில்

நடக்கும் அவ்வளவு காரியங்களும் இந்தப் பாலிடெக்னிக் கலாசாலையில் நடைபெறுகின்றன என்று சொல்லி விடலாம். சில பகுதிகளை மட்டும் நுணுக்கமாக ஆராயாமல்விட்டுவிடுகிறார்கள். அவ்வளவுதான். பொறி இயற் கல்லூரியில் பட்டப் படிப்புக்கு நாலு ஆண்டுகள் படிக்கவேண்டும். இண்டர்மீடியட் என்னும் இடை வகுப்பில் தேறி இருக்க வேண்டும். பாலிடெக்னிக் கலாசாலையில் இடம் பெறுவதற்கு எஸ். எஸ். எல். சி. பாஸ் செய்திருந்தாலே போதுமானது. அத்துடன் மூன்று ஆண்டுகள் படிப்பு முடிந்த உடனேயே பாலிடெக்னிக் மாணவர்களுக்குப் பொறி இயல் அத்தாட்சிப் பத்திரம் வழங்கி வருகிறார்கள்.

அழகப்பா பொறி இயற் கல்லூரியையும், பாலிடெக்னிக் பகுதியையும் பார்த்துவிட்டு வந்த பிறகும், அங்குள்ள மாணவர்களின் உற்சாகமான மலர்ந்த முகங்களும், அவர்களுக்குப் பொறி இயற் கலையைக் கற்றுக்கொடுக்கும் பொறி இயல் நிபுணர்களின் கடமை உணர்ச்சியும் இன்னும் என் கண்முன்னே தோன்றிக் கொண்டிருக்கின்றன. இவைகளுக்கெல்லாம் மேலே இந்தக் கல்லூரியின் ஸ்தாபகர் டாக்டர் அழகப்பரின் அன்பு நிறைந்த விசாலமான இருதயம் என்னை எங்கேயோ அழைத்துச் சென்றுவிடுகிறது.

“மாணவர்கள் டாக்டர் அழகப்பரைப் போலவே தாங்கள் சம்பாதிக்கும் பொருளை நல்ல தர்ம காரியங்களுக்குக் கொடுக்கும் பண்பைக் கற்றுக்கொள்ள வேண்டும். இதோ டாக்டர் அழகப்பர் ஒரு உயிருள்ள புத்தகமாக இருக்கிறார். எப்படி ஒரு மனிதன் சிறந்த காரியங்களுக்குத் தர்மம் செய்யலாம் என்பதை அவருடைய வாழ்க்கையில் இருந்து படித்துக்கொள்ள வேண்டும். டாக்டர் அழகப்பரிடம் இருக்கும் தன்னம்பிக்கையும், தைரிய சக்தியையும் எல்லோரும் பெறுவதற்கு முயல வேண்டும்” என்று ராஜாஜ

அவர்களே கூறி இருக்கும்போது அதற்கு மேல் டாக்டர் அழகப்பரைப்பற்றி நான் என்ன சொல்லப் போகிறேன்?

*　　　　*　　　　*

அழகப்பரின் அதிசய சாதனைகளினால் வளர்ந்த இரண்டு கல்லூரிகளையும், மின்சார ரஸாயன ஆராய்ச்சிச் சாலையையும் பார்த்து விட்டோம். இன்னும் நாலு கல்லூரிகளையும் சின்னஞ்சிறு பாலர்களுக்கான மாண்டிசோரி பள்ளிக்கூடத்தையும் அடுத்துப் பார்க்கலாம்.

பொறி இயற் கல்லூரிகளையும், ஆராய்ச்சிக் கூடத்தையும் போல அவைகளையெல்லாம் நின்று நிதானமாகப் பார்ப்பது அவ்வளவு சாத்தியமில்லை. ஒரு நாளிலேயே அவைகளைப் பார்த்துவிட வேண்டியது தான். ஆகவே அவைகளைச் சற்று அவசரமாகவே பார்ப்பதற்குத் தயாராக இருங்கள்.

## 5. மனிதருக்குள் ஒரு வள்ளல்

வங்காளக் குடாக்கடல் பொங்கிக் கொண்டிருந்தது. 'ஓ'வென்று சுற்றிச் சுழன்று அடித்த காற்றினால் சமுத்திரம் மேலும் கிளர்ச்சியுற்று அலைத்தது. சிற்றலைகளும், பேரலைகளும் ஒன்றோடொன்று மோதிக்கொண்டிருந்தன. இதன் மத்தியில் சென்னைத் துறைமுகத்திலிருந்து புறப்பட்ட கப்பல் ஒன்று மலேயாவை நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. கப்பலில் ஏராளமான பிரயாணிகள் இருந்தனர். அவர்களெல்லோரும் உற்சாகமாகப் பேசிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் இருந்தனர். சிலர் தங்கள் எதிர்காலத்தைப் பற்றி என்னென்னவோ இன்பக்கனவுகள் கண்டுகொண்டிருந்தனர். இவர்களுக்கு மத்தியில் ஐந்தாவது பாரம் படித்த சிறுவன் ஒருவன் இருந்தான். அவன் தன் தந்தையின்

அழைப்பை ஏற்றுப் பாதியில் படிப்பை நிறுத்திவிட்டு மலேயா சென்று கொண்டிருந்தான். அவன் இளம் உள்ளம் படிப்பை நிறுத்திவிட்டுப் பிரயாணம் செய்வதை விரும்பவில்லை. ஆனாலும் தந்தையின் கட்டளையை மறுக்கவும் முடியவில்லை. கடல் அலைகளைப் போலவே அவன் மனமும் ஒரு நிலையில் நில்லாமல் தவித்துக் கொண்டிருந்தது.

மன அமைதியைநாடிக் கப்பலின் மேல் தளத்துக்குச் சென்றான். ஏதோ சிந்தனை செய்த வண்ணம் அலைக்கும் கடலைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் இதயத்திலும் எத்தனையோ எண்ண அலைகள் வந்து மோதுவதை உணர்ந்தான். எதிர்காலத்தைப் பற்றி அவன் கனவுகளெல்லாம் தன் தந்தையின் கட்டளையால் சிதறுண்டு போய்விட்டனவே என்று எண்ணித் தவித்தான். இளம் இதயத்தில் ஏற்பட்ட எண்ணங்களின் அதிர்ச்சியை உடல் தாங்க முடியவில்லை. திடீரென்று அவனுக்குக் கடுமையான ஜுரம் வந்துவிட்டது.

சிறுவனுக்கு ஜுரம் என்பதைக் கண்ட கப்பல் தலைவர் திடுக்கிட்டார். சிறுவனுக்கு ஜுரம் வந்துவிட்டதே என்று இரக்கம் காரணமாகக் கப்பல் தலைவர் கலங்கவில்லை. ‘சிறுவனுக்கு அம்மை நோய் வரப்போகிறது. அதன் அறிகுறிதான் இந்த ஜுரம்’ என்று தீர்மானித்துவிட்டார். ‘அம்மை நோய் ஒட்டுவாரொட்டியாயிற்றே! கப்பலில் பிரயாணம் செய்யும் நூற்றுக் கணக்கான பிரயாணிகளுக்கு அம்மை நோய் தொற்றிக் கொள்ளுமே’ என்பதற்காகவே வெள்ளைக்காரரான அந்தக் கப்பல் தலைவர் அவ்வளவு தூரம் கவலைப் பட்டார்.

கப்பல் சிங்கப்பூரை வந்து சேர்ந்தது. கப்பல் தலைவர் எந்தவிதமான யோசனையும் செய்யவில்லை. வேண்டாத சாமானைக் கப்பலில் இருந்து இறக்கி வைப்பது போல நோய்வாய்ப்பட்டிருந்த சிறுவனை

நாகப்பட்டினத்தில் இறக்கிவிட்டார். கப்பலில் இருந்து கடும் காய்ச்சலுடன் இறக்கிவிடப்பட்டிருந்தாலும் சிறுவனுக்கு மனதில் திருப்தி ஏற்பட்டது! தான் பம்பாய் செல்லவில்லை என்பதை எண்ணி மகிழ்ந்தான். தக்க சமயத்தில் வந்து உதவி செய்த ஜுரத்தை வாழ்த்தினான். தன்னுடைய படிப்பைத் தொடர்ந்து படிக்கலாம் என்று திருப்தியடைந்தான். அதன் காரணமாக அவனுடைய ஜுரமும் கிடுகிடென்று இறங்கிவிட்டது.

1925-ம் ஆண்டு இந்தச் சம்பவம் நடைபெற்றது. அன்றைய தினம் கப்பல் தலைவர் அந்தச் சிறுவனை நாகப்பட்டினத்தில் இறக்கிவிடவில்லை யென்றால் இன்றைய தினம் உலகம் வியக்கும் அழகப்பா கல்லூரிகள் தோன்றியிருக்க முடியாது. கப்பல் தலைவர் சிறுவன் அழகப்பனை நாகப்பட்டினத்தில் இறக்கிவிட்டது தமிழ் நாடும், தமிழ் மக்களும் செய்த பாக்கியம் என்று தான் சொல்லவேண்டும். கப்பல் தலைவரின் கருணை சித்தம் அடியோடு வாழ்க! அன்று அந்த வெள்ளைக்காரர் அப்படிச் செய்திராவிட்டால் சிறுவன் அழகப்பன் டாக்டர் அழகப்பராகி இருக்கமாட்டார்; கொடைவள்ளல் என்று பெயரெடுத்திருக்கமாட்டார்; மனிதருக்குள் ஒரு வள்ளலாக அவர் வாழ்ந்திருக்க முடியாது. வெறும் வட்டிக் கடைச் செட்டியாராக, பணப் பெட்டியைக் காக்கும் மனித இயந்திரமாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

*        *        *

தம் புதல்வன் கடும் ஜுரம் காரணமாக நாகப்பட்டினத்தில் இறக்கிவிடப்பட்டான் என்பதை எண்ணித் தந்தை மிகவும் கஷ்டப்பட்டார். குழந்தை எப்படியாவது உடல் நலத்தோடு இருந்தால் போதும் என்று எண்ணியது அவர் தந்தை உள்ளம். அதனால் சிறுவன் அழகப்பனின் விருப்பப்படி மேல் படிப்பு படிப்பதற்கு அனுமதியும் கொடுத்தார்.

அழகப்பர் பள்ளி மாணவராக இருக்கும்போது பெரிய கொடை வள்ளலாகத் திகழப் போகிறார் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. எல்லா மாணவரையும் போல அவரும் ஒரு சாதாரண மாணவராகத்தான் இருந்தார். அழகப்பரின் பெற்றோர்களும் அவ்விதம் நினைக்கவில்லை. அவர்கள் அப்படி நினைத்திருந்தால், "நீ படித்தது போதும். நம்முடைய வட்டிக் கடையைப் பார்த்துக் கொள்ள வா!" என்று பள்ளிக்கூட மாணவரான அழகப்பரை இந்தியாவிலிருந்து மலேயாவுக்கு அழைத்திருப்பார்களா? "கல்லூரியில் படிப்பதற்கு அனுமதி வேண்டும்" என்று கடிதத்துக்குமேல் கடிதம் எழுதி, தந்தி மேல் தந்தி அடித்துத் தந்தையிடம் உத்தரவு பெறும் நிலைமைதான் ஏற்பட்டிருக்குமா?

தந்தையின் உத்தரவு கிடைத்ததும் அழகப்பர் கல்லூரியில் சேர்ந்து படித்தார். இண்டர் மீடியட் என்னும் இடை வகுப்பில் முதலாவதாகத் தேறினார். இந்தச் சமயத்தில்தான் அந்தச் சோக சம்பவம் நிகழ்ந்தது. அழகப்பரின் அருமைத் தாயார் காலமானார். அவரைத் தொடர்ந்து அன்பே உருவான அவருடைய தந்தையும் மறைந்தார். பெற்றோர்களை இழந்த அழகப்பர் மேலே கல்லூரிப் படிப்பைத் தொடர்வதை அவர் உறவினர்கள் யாரும் விரும்பவில்லை. அவருடைய தமையனார்கூட மேலே படிக்க வேண்டாம் என்றுதான் கேட்டுக்கொண்டார். ஆனால் அழகப்பரின் அறிவுப் பசி உறவினர்கள் சொல்லையும், தமையனார் தடுப்பையும் கேட்கவில்லை. எல்லாருடைய விருப்பத்துக்கும் விரோதமாக அறிவுச் செல்வத்தை நாடிச் சென்றார். கல்லூரியில் தொடர்ந்து படித்தார். பி. ஏ. ஆனர்ஸ் பட்டமும் பெற்றார். பிறகு இங்கிலாந்துக்குச் சென்று ஐ. ஸி. எஸ். பட்டப் படிப்பு படிக்க வேண்டும் என்று விரும்பினார்.

*   *   *

இங்கிலாந்து சென்றபோதுதான் அழகப்பரின் உடல்நிலை சரியில்லை என்பதைத் தெரிந்து கொள்ள முடிந்தது. அதனால் ஐ. ஸி. எஸ். படிப்பு படிக்க முடியாமற் போய்விட்டது. உடல்நிலை ஐ. ஸி. எஸ். படிப்புக்குத்தானே தடை செய்தது. வேறு படிப்புக்குத் தடை கிடையாதல்லவா? ஆகவே, உடல் நிலையைக் காரணம் காட்டித் தடுக்க முடியாத பாரிஸ்டர் பட்டம் பெறுவதற்குப் படித்தார். பாரிஸ்டர் படிப்புக்கு முழு நேரமும் தேவையில்லை என்பதை உணர்ந்தார். பாரிஸ்டர் படிப்புக்குப் படிக்கும் நேரம் போகப் பாக்கி நேரத்தை எப்படிச் செலவிடுவது என்று யோசித்தார். அழகப்பருக்குப் பொழுதை வீணாகக் கழிப்பவர்களைக் கண்டால் பிடிக்கவே பிடிக்காது. அவரும் வீண் பொழுது போக்க மாட்டார். ஆகையால் பாரிஸ்டர் படிப்புக்குப் படிக்கும் நேரம் போக மற்ற நேரத்தை உபயோகமான ஏதாவது ஒரு நல்ல தொழிலில் ஈடுபடுத்த வேண்டும் என்று அழகப்பர் விரும்பினார்.

அப்பொழுது லண்டனில் மகாநாடு கூடியிருந்தது. இந்தியாவிலிருந்து பல தலைவர்கள் அதில் கலந்து கொள்வதற்காக லண்டனுக்கு வந்திருந்தார்கள். தமிழ் நாட்டிலிருந்து திரு சீனிவாச சாஸ்திரியார் அவர்களும் வந்திருந்தார். திரு சீனிவாச சாஸ்திரியார் வந்திருக்கிறார் என்பதை அறிந்ததும் அழகப்பர் அவரைப் போய்ப் பார்த்தார். தம்முடைய விருப்பத்தையும் தெரிவித்து அதற்கு உதவி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். திரு சீனிவாச சாஸ்திரியாருக்கு எப்பொழுதுமே மாணவர்களிடத்தில் மிகுந்த மதிப்பும் மரியாதையும் உண்டு. ஆகையால் அழகப்பர் தம்முடைய ஓய்வு நேரத்தைச் செலவழிக்க ஏதாவது ஒரு தொழிலில் ஈடுபட உதவி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டதும், திரு சீனிவாச சாஸ்திரியார் அதற்கு உற்சாகமாக உதவி அளிக்க முன்வந்தார்.

திரு சாஸ்திரியார் அவர்களின் உதவியுடன் லண்டனில் உள்ள 'சார்ட்டர்டு பாங்க்-ஆப் இந்தியா'வில் அழகப்பர் வேலைக்கு அமர்ந்தார். பிரிட்டிஷ் சர்க்கார் செல்வாக்குடன் இருந்த அந்தக் காலத்தில் லண்டனில் உள்ள இந்தப் பாங்கியில் முதன் முதலாக வேலையில் சேர்ந்த இந்தியர் அழகப்பர்தான்.

பாரிஸ்டர் படிப்பு முடிந்த பின்னும், பாங்கு வேலை பார்த்த பிறகும் கூட அழகப்பருக்கு இன்னும் ஓய்வு நேரம் கிடைத்தது. அந்த நேரத்தையும் ஏதாவது பயன் உள்ள முறையில் செலவு செய்ய வேண்டும் என்று எண்ணமிட்டார். அதற்கு என்ன செய்யலாம் என்று தீவிரமாக யோசனை செய்தார். விமானம் ஓட்டும் கலையைப் பயிலத் தொடங்கினார். விமானம் ஓட்டுவதிலும் சிறந்து விளங்கினார்.

பாரிஸ்டர் படிப்பும், பாங்கித் தொழில் அனுபவமும், விமானம் ஓட்டும் கலையையும் பயின்று முற்றிலும் புதிய மனிதராக 1933-ம் ஆண்டு இந்தியாவுக்கு வந்தார்.

* * *

இந்தியா திரும்பியதும் பங்கு வியாபாரத் தொழிலில் ஈடுபட்டார். அதில் உள்ள மகோன்னத மான நிலைமையையும் பார்த்தார். இத்தொழிலில் பல லட்சம் ரூபாய்களைச் சேர்த்து விட்டார். பணம் இருக்கும்போது இருக்கும் நண்பர்களையும், நட்புக் காகவே நட்பு கொள்ளும் சிநேகிதர்களையும் அப்பொழுது அழகப்பரால் இனம் கண்டு கொள்ள முடிந்தது.

வேறு தொழில் துறையில் ஈடுபட முயன்றார். கேரள நாட்டில் ஒரு நூல் ஆலையை ஏற்படுத்த விரும்பினார். திருச்சூருக்கு எட்டு மைல்களுக்கு அப்பால் உள்ள புதுக்காடு என்னும் ஊருக்கு அருகில் "அழகப்பா

நூல் ஆலை"யை நிறுவினார். அழகப்பா நூல் ஆலை ஆரம்பிப்பதற்கு முன் வெறும் காடும் கரம்புமாக இருந்த பூமி ஆயிரக்கணக்கான மக்கள் வசித்து வரும் அழகு மிக்க நகரமாகிவிட்டது. அந்த நகருக்கும் 'அழகப்பா நகர்' என்றுதான் பெயர். இப்பொழுது அழகப்பா நூல் ஆலையில் ஐம்பதாயிரம் கதிர்கள் சுழலுகின்றன. ஆயிரக்கணக்கான தொழிலாளர்களும், குமாஸ்தாக்களும், உத்தியோகஸ்தர்களும் "அழகப்பா நூல் ஆலை"யில் மிகுந்த உற்சாகத்துடன் பணியாற்றி வருகின்றனர்.

டாக்டர் அழகப்பர் தமக்கு உதவி செய்தவர்களை எப்பொழுதும் மறக்க மாட்டார். எவ்வளவோ கஷ்டமான நிலையிலும் தமக்குத் தளராத உறுதியையும் திட நம்பிக்கையையும் அளித்த ஆண்டவனுக்கு முதலில் காணிக்கை செலுத்த விரும்பினார்.

தமக்கு வாழ்வளித்த ஆண்டவனின் பெருங் கருணைக்கு எப்படி நன்றி செலுத்த முடியும்? வாழ்க்கையில் நாணயமாக வாழ்ந்து வருவதற்கு முயல்வதே ஆண்டவனுக்குச் செலுத்தும் நன்றிதான். என்றாலும் அதற்கு முதல் படியாகப் பல ஆயிரம் ரூபாய்கள் செலவில் கண்ணபிரானுக்கு அழகு நிறைந்த திருக் கோயில் ஒன்று எடுத்து மகிழ்ந்தார்.

அழகப்பர் யாரும் எதிர்பார்க்காத முறையில் தொழிலைக் 'கிரு கிரு' என்று பெருக்கினார். எத்தனையோ எதிர்ப்புக்களுக்கும், இடையூறுகளுக்கும், கஷ்டங்களுக்கும், நஷ்டங்களுக்கும் மத்தியில் ஏகாக்ர சித்தத்துடன் நின்று தொழிலை வளர்த்தார். இந்தச் சமயத்தில் அன்பே உருவமான பல தெய்வ மனிதர்களையும் பார்த்தார்; இருதயமற்ற அரக்கர்களையும் பார்த்தார். பணம் சம்பாதிப்பதற்காக மக்கள் செய்துவரும் சூதுவாதுகளை நன்றாக உணர்ந்தார். பணம் படைத்தவர்கள் தங்கள்

ஸ்தாபனங்களுக்கு இரண்டு கைகளாலும் அள்ளி அள்ளிக் கொடுத்தார். பிறகு தாமே தம்முடைய சொந்தப் பொறுப்பில் காரைக்குடியில் கலாசாலைகள் நிறுவினார். இன்றைய தினம் அழகப்பரின் கல்வி தர்மத்தினால் ஆயிரக்கணக்கான மாணவர்கள் அறிவும் ஆற்றலும் பெற்ற நிபுணர்களாக அவருடைய கல்வி ஸ்தாபனங்களிலிருந்து வெளி வருகின்றனர்.

டாக்டர் அழகப்பர் 1909-ம் ஆண்டு ராமநாதபுரம் ஜில்லாவில் உள்ள கோட்டையூரில் பிறந்து, நாற்பத்தெட்டு ஆண்டுகளுக்குள் நாட்டு மக்கள் வியக்கும்படி பல அதிசய சாதனைகளைப் புரிந்திருக்கிறார். எல்லாச் செல்வங்களையும் பெற்ற டாக்டர் அழகப்பருக்கு ஆண்டவன் நோயற்ற செல்வத்தை மட்டும் கொடுக்கவில்லை. அதையும் தம்முடைய இணையற்ற மனோதிடத்தால் டாக்டர் அழகப்பர் அவர்கள் வென்று வந்தார் என்றுதான் சொல்ல வேண்டும்.

“டாக்டர் அழகப்பரின் கல்லூரிகள் அழகப்பா சர்வ கலாசாலையாக மாற வேண்டும். அது இந்த உலகில் உள்ள இதர சர்வகலாசாலைகள் எல்லாம் பார்த்து வியக்கும் முறையில் சிறப்புடன் விளங்கவேண்டும்” என்று பிரார்த்திப்போம்.

இந்தப் பிரார்த்தனையுடன் டாக்டர் அழகப்பரின் இதர கல்லூரிகளை எல்லாம் பார்ப்போம். அவர் காரைக்குடியில் முதன் முதலில் ஆரம்பித்து வைத்த அழகப்பா கலைக் கல்லூரிக்குள் இப்பொழுது செல்லுவோம்.

* * *

அழகப்பா கலைக் கல்லூரி அமைந்திருக்கும் இடமும் அதன் கம்பீரமான கட்டடங்களும் கல்வித் துறையில் ஆர்வம் உள்ளவர்கள் ஒவ்வொருவரும் பார்த்துப்

கலைக் கல்லூரி பிரின்ஸ்பல் திரு ப. எஸ். தம்பி கூறிய டாக்டர் அழகப்பரின் கலைக் கல்லூரி ஆரம்பித்த கதையையும், கல்லூரியையும் அறிந்து கொண்டோம்.

கல்லூரி என்றால் எப்படி யிருக்கவேண்டும், வெறும் படிப்பு மட்டும் போதுமா? மனுவல் பயிற்சியும் வேண்டுமா? என்பதைப் பற்றி திரு தம்பி விளக்கிக் கூறிய விதத்தையும் கலைக் கல்லூரி மாணவர்களுக்குப் படிப்புடன்கூட மனுவல் பயிற்சியும் அளித்து வருவதைக் கண்டு களிக்கலாம்.

## 6. அழகப்பா கலைக் கல்லூரி

இந்தக் கல்வி ஸ்தாபனம் ஆரம்பித்த கதை பலர்களுக்குத் தெரிந்ததுதான். ஆனால், மீண்டும் ஒருமுறை நினைவூட்டி வைக்கிறேன். ஒரு சமயம் மகாகனம் திரு லட்சுமணசாமி முதலியார் ஆற்றிய சொற்பொழிவைக் கேட்டுவிட்டு உடனே இந்தக் கல்லூரியை ஆரம்பித்தார் டாக்டர் அழகப்பர். முதலில் காரைக்குடி நகரில் காரைக்குடி நகரசபைக்குச் சொந்தமான 'காந்தி மாளிகை' என்னும் கட்டடத்தில் 140 மாணவர்களுடன் இந்தக் கல்லூரி தொடங்கப்பட்டது. அப்பொழுது சென்னை ராஜ்யத்தின் கல்வி மந்திரியாக இருந்த திரு அவிநாசிலிங்கம் செட்டியார் அவர்கள் அழகப்பா கலைக் கல்லூரியைத் திறந்து வைத்தார்.

பிறகு காரைக்குடி ரயில்வே நிலையத்துக்கு அருகில் உள்ள திறந்த வெளியில் சுமார் ஒரு சதுர மைல் விஸ்தீரணம் நிலம் கல்லூரியின் கட்டடம் கட்டுவதற்காக வாங்கப்பட்டது. அங்கு துரித காலத்தில் கட்டடங்கள் கட்டப்பட்டன. ஒரே வருஷத்தில் கட்டடங்கள் வளர்ந்துவிட்டன. அதுபோலவே கல்லூரியில்

மாணவர்களின் எண்ணிக்கையும் 140-ல் இருந்து 312 ஆக உயர்ந்துவிட்டது.

1948-ம் ஆண்டு சென்னை ராஜ்யத்தில் முதன் மந்திரியாக இருந்துவந்த திரு ஓ. பி. ராமசாமி ரெட்டியார் அழகப்பா கலைக் கல்லூரியின் புதிய கட்டடத்தைத் திறந்து வைத்தார். அப்பொழுதே இந்தக் கல்லூரியில் பி. எஸ்ஸி. விஞ்ஞான சாஸ்திர வகுப்புகள் நடைபெற ஆரம்பித்துவிட்டன.

டாக்டர் அழகப்பாவின் சலியாத உழைப்பினாலும், பிரின்ஸ்பால் திரு சூரியநாராயணன், பிரின்ஸ்பால் திரு ஏ. என். தம்பி அவர்களுடைய திறமை மிக்க நிர்வாகத்தினாலும் அழகப்பா கலைக் கல்லூரி சிறப்புடன் ஓங்கி வளர ஆரம்பித்துவிட்டது.

கல்லூரிக் கட்டடங்களை ஒட்டி மாணவர்களுக்கான விடுதிகள் கட்டப்பட்டன. விசாலமான விளையாட்டு மைதானம் அமைத்தார்கள். மேலும் கல்லூரி வளர்ந்தது. பலவிதமான சாஸ்திரப் பாடங்கள் போதிக்கும் வசதியைப் பெற்றது. இன்றைய தினம் கலைக் கல்லூரியில் மட்டும் 1,300 மாணவர்கள் படித்து வருகிறார்கள். அழகப்பா கலைக் கல்லூரி தமிழ் நாட்டில் இமயம்போல் நிமிர்ந்து நிற்கிறது. சென்ற பத்தே ஆண்டு காலத்துக்குள் சென்னை ராஜ்யத்தில் உள்ள மிகச் சிறந்த கலைக் கல்லூரிகளில் ஒன்றாக மாறி விட்டது!

இப்பொழுது அழகப்பா கலைக் கல்லூரிகளில் எல்லாவிதமான கலைகளையும் கற்றுக் கொடுக்கின்றனர். ஆங்கிலம், தமிழ், விஞ்ஞானம், பூகோளம், சரித்திரம், பூதத்துவம், உடல் தத்துவம் இன்னும் கலைக் கல்வி கற்க வேண்டிய அத்தனை பாடங்களும் கற்றுக் கொடுக்கின்றனர். இந்தப் பாடங்களையெல்லாம் சொல்லிக் கொடுப்பதற்கு அனுபவம் நிறைந்த பல

அறிஞர்கள் இருக்கின்றனர். ஒவ்வொரு பகுதியிலும் மிகச் சிறந்த நூல்நிலையம், கண்காட்சிச்சாலை எல்லாம் இருக்கின்றன. பூதத்துவக் கண்காட்சிக்கூடம் பார்த்துப் பார்த்து அனுபவிக்கக்கூடியதா யிருக்கிறது. இந்தக் காட்சிக்கூடத்துக்குள் ஒரு மனிதன் சென்றுவிட்டால் அவன் சாதாரணப் பொருளாக மாறிவிடுவான். அவ்வளவு அதிசயமான பொருள்கள், கற்பனை செய்து பார்க்க முடியாத அபூர்வ சாமான்கள் இருக்கின்றன. மாணவர்களின் அறிவு வளர்ச்சிக்கு இவ்வளவு சாதனங்கள் செய்து வைத்திருப்பதுடன் திருப்தி அடையாமல் அடிக்கடி வெளியிடங்களிலிருந்து பல அறிஞர்களையும் வரவழைத்து மாணவர்களுக்குப் பாடம் போதித்து வருகின்றனர்.

இந்தக் கல்லூரி மாணவர்களின் கட்டுப்பாட்டையும், அவர்களிடம் வளர்ந்துள்ள சிறந்த பண்பாட்டையும் பாராட்ட வேண்டும். இந்தச் சிறந்த கலையைப் பெறுவதற்காவது அழகப்பா கலைக் கல்லூரியில் படிக்கலாம்போல் தோன்றுகிறது. ஒரே வார்த்தையில் சொல்ல விரும்பினுல் அழகப்பா கல்லூரி மாணவர்கள் உண்மையான கல்வி அறிவைப் பெற்ற மாணவர்களாகத் திகழ்கின்றனர்.

“ இந்தப் பள்ளிக்கூட மாணவர்கள் பள்ளிப் படிப்பு முடிந்து வெளியில் சென்றதும், எந்த வேலையைச் செய்யவும் தயங்கமாட்டார்கள். வெறும் போலி கௌரவத்தை எண்ணிச் சோம்பேறிகளாக வாழமாட்டார்கள். தங்கள் தற்கால வாழ்க்கையில் மிகுந்த நம்பிக்கையுடன் இருப்பார்கள் ” என்று அழகப்பா கல்லூரி பிரின்ஸ்பால் திரு ஏ. என். தம்பி கூறியதை நான் வெறும் உபசார வார்த்தையாக எண்ணவில்லை. அவர் கூறியது முற்றிலும் உண்மை என்பதை அழகப்பா கல்லூரி மாணவர்களைப் பார்த்தவுடனேயே தெரிந்துகொள்ள முடிகிறது.

**கலைக் கல்லூரி பிரின்ஸ்பல்**

அழகப்பா கலைக் கல்லூரியின் பிரின்ஸ்பலாக இருந்த திரு டி. சூரியநாராயணன் அவர்கள் ஹைதராபாத் கல்வித் துறைத் தலைவராக மாற்றப்பட்ட பின் திரு ஏ. என். தம்பி பிரின்ஸ்பலாகப் பதவியேற்றார்.

திரு ஏ. என். தம்பி கேரள நாட்டில் நீண்ட நாட்கள் இருந்தவர். திருவாங்கூர் சமஸ்தானத்தின் கல்வித் துறைத் தலைவராகப் பல காலம் பணியாற்றியவர். அவர் காலத்தில் திருவாங்கூர் ராஜ்யத்தில பல நூற்றுக் கணக்கான ஆரம்பப் பள்ளிகளையும், உயர்தரப் பள்ளிகளையும் ஆரம்பித்து வைத்திருக்கிறார். திருவாங்கூர் மக்கள் நூற்றுக்கு நூறு படித்தவர்களாக இருப்பதற்குத் திரு ஏ. என். தம்பியின் சேவையையும் குறிப்பிட வேண்டும். இவ்வளவு திறமையைக் கல்வி இலாகாவின் தலைமைப் பதவியை ஏற்று நடத்தி வந்த திரு ஏ. என். தம்பி 1950-ம் ஆண்டு அந்தப் பதவியில் இருந்து ஓய்வு பெற்றார். ஓய்வு பெற்றவுடனேயே அழகப்பா கலைக் கல்லூரியில் பிரின்ஸ்பல் பதவியை ஏற்றுக்கொண்டார். தம்முடைய நீண்ட நாள் அனுபவத்தை எல்லாம் பயன்படுத்திக் கல்லூரியை மிகச் சிறந்த முறையில் நடத்தி வருகிறார்.

திருவாங்கூர் சமஸ்தானத்தின் கல்வி இலாகா தலைவராக இருப்பதற்கு முன்னால் பலவிதமான பதவிகளை வகித்துப் பெரும் புகழ் பெற்றவர் திரு ஏ. என். தம்பி. இன்றைய தினம் அழகப்பா கல்லூரி மாணவர்களுக்கு வெறும் ஏட்டுக் கல்வியை மட்டும் அவர் போதிக்கவில்லை. நமது நாட்டுப் பண்பாட்டையும், நமது முன்னோர்களின் ஆற்றலையும் அவர்கள் செய்த வித்தைகளையும் மாணவர்கள் உணரும்படி செய்து வருகிறார்.

இதனால்தான் இங்குள்ள மாணவர்களைப் பார்த்த போது வெறும் டம்பத்துக்காக வாழும் ஏட்டுக் கல்வி மாணவர்களாக நமக்குத் தோன்றவில்லை. தங்கள் முன்னோர்களையும், தங்கள் நாட்டையும் போற்றி வரும் உத்தம மாணவர்களாகவே அவர்கள் திகழ்ந்து வருகிறார்கள்.

“ இதோ தேசிய மாணவர் படையைப் பாருங்கள் ! கல்வியறிவோடு மன உறுதியும், உடல் வலிவும், ராணுவப் பயிற்சியும் மாணவர்களுக்கு அவசியம் தேவையல்லவா ? அதற்காக மாணவர்கள் தேசிய மாணவர் படையில் சேர்ந்து, ராணுவப் பயிற்சி பெற்று ஆயுதங்களை உபயோகிக்கக் கற்றுக்கொள்ளும் அதிசயத்தைப் பாருங்கள் !” என்று அடுக்கிக்கொண்டே போனார், கலைக் கல்லூரி பிரின்ஸ்பால் திரு தம்பி அவர்கள்.

மக்கள் ஆட்சி மக்களின் நலனுக்காகத் தாய்நாடு முழுவதிலும் நடந்து வருகிறது. ஆட்சிப் பொறுப்பு இப்போது மக்கள் கையில் இருக்கிறது. ஆட்சி அதிகாரப் பொறுப்புக்களில் முக்கியமான பொறுப்பு தேசப் பாதுகாப்புப் பொறுப்பாகும். ‘ தேச சுதந்திரத்தையும், விடுதலையையும் பாதுகாக்கும் மகத்தான புனிதப் பணியில் தங்கள் பங்கை நிறைவேற்றி வைக்க மாணவர்கள் முன் வந்துவிட்டார்கள் ’ என்று தோன்றியது. மாணவர்கள் ஆயுதம் தாங்கி, அணிவகுத்து நிற்பதைக் கண்டதும், சந்தோஷத்தினால் நானும் ராணுவ நடை பயின்றேன்.

தேசியப் படையில் சேருவதினால் ஒழுங்கும், கட்டுப்பாடும், ஒற்றுமையும், தலைமை தாங்கி நடத்தும் ஆற்றலும் மாணவர்களுக்கு வளர்ந்து வருகின்றன என்று பிரின்ஸ்பல் திரு தம்பி எடுத்துக் கூறினார்.

இப்போது நம் நாடு வறுமை, பிணி, அறியாமை ஆகியவற்றை ஒழிக்கும் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறது. இத் தீய சக்திகளை ஒழிப்பதில் மாணவர் தேசியப் படை ஈடுபட்டால் விரைவில் தீய சக்திகள் ஒழிந்து தேசம் சுபிட்சப் பாதையில் முன்னேறிவிடும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

*　　　*　　　*

திரு தம்பியின் முயற்சியால் இங்கு ஒரு பெரிய நூல் நிலையமும் இருந்து வருகிறது. ஒவ்வொரு கல்விக்கும் வேண்டிய புத்தகங்களும் அதற்கான துணைக் கருவிகளும் ஏராளமாக இருக்கின்றன. இவ்வாறு இந்தக் கல்வி ஸ்தாபனம் வளருவதற்கு டாக்டர் அழகப்பருடன் எத்தனையோ பேர்கள் இரவு பகலாகப் பாடுபட்டு வருகிறார்கள் என்ற விவரங்களையும் பிரின்ஸ்பல் திரு ஏ. என். தம்பி மூலமாகத் தெரிந்துகொண்டேன்.

கடைசியில், "ஏதோ என்னால் முடிந்தவரையில் தொண்டாற்றி வருகிறேன்" என்று அடக்கமாகக் கூறினார் திரு தம்பி அவர்கள்.

அவரிடம் அளவற்ற ஆற்றலும் அதற்கேற்ற அடக்கமும் இருப்பதைக் கண்டு பெரிதும் வியப்படைந்தேன். எப்போதும் நிறைகுடம் தளும்புவதில்லையல்லவா? திரு ஏ. என். தம்பி நீண்ட காலம் திருவாங்கூர் ராஜ்யத்தில் இருந்ததால்தானோ என்னவோ, தமிழ் மக்களிடத்திலும் தமிழ் மொழியின் மீதும் அளவற்ற அன்பு கொண்டிருக்கிறார். அவருக்குள்ள தமிழ்ப் பற்றை விளக்குவதற்கு ஒரே ஒரு சம்பவத்தைச் சொன்னால் போதும்.

திருவாங்கூர் சமஸ்தானத்தின் கல்வித் துறைத் தலைவராக இருந்தபோது நாஞ்சில் நாட்டில் கட்டாயக் கல்வியைக் கொண்டு வந்தார் திரு ஏ. என். தம்பி. அந்தத் தொண்டைப் பாராட்ட நாஞ்சில் நாட்டு

மக்களின் சார்பாகக் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் திரு தம்பிக்கு ஒரு பாராட்டுப் பத்திரம் வாசித்துக் கொடுத்தார். "கவிமணியிடம் பாராட்டுப் பத்திரம் பெற்றதைவிட எனக்கு வேறு என்ன பாக்கியம் வேண்டும்?" என்று திரு ஏ. என். தம்பி பெருமையாகச் சொல்லிக் கொண்டது இன்றும் என் காதில் ஒலித்துக் கொண்டே இருக்கிறது.

தமிழ்ப் பற்றும், கல்வித் துறையில் நல்ல அனுபவமும் பெற்ற திரு தம்பியின் தலைமையில் நடைபெற்றுவரும் அழகப்பா கலைக் கல்லூரி மேலும் மேலும் சிறப்புற்று விளங்கும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

திரு தம்பி அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பியதும், "கோட்டையூருக்குப் போவோமா?" என்று கேட்டார் உடன் வந்தவர்.

"கோட்டையூருக்கா? நமக்கு அங்கு என்ன வேலை இருக்கிறது?" என்று கேட்டேன்.

"அங்குதான் அழகப்பா பெண் கல்லூரி இருக்கிறது!"

"கோட்டையூரிலா? ஏன் காரைக்குடியில் அதற்கு இடம் இல்லையோ?"

"தற்பொழுது அதற்குக் காரைக்குடியில் இடம் இல்லை என்பது உண்மைதான். அதற்கான கட்டடம் இப்போதுதான் இங்கு கட்டப்பட்டு வருகிறது. அந்தக் கட்டடம் கட்டி முடிந்தவுடன் அழகப்பா பெண் கல்லூரி காரைக்குடிக்கே வந்துவிடும்."

"இப்போது பெண் கல்லூரி கோட்டையூரில் நல்ல கட்டடத்தில்தான் இருக்கிறதா?"

"என்ன கேள்வி இது? அழகப்பா கல்லூரிகளுக்குள்ளேயே மிக நல்ல கட்டடத்தில், அரண்மனையிலேயே

இருப்பது அழகப்பர் பெண் கல்லூரி ஒன்றுதான். அதை நேரில் பார்த்தால்தான் உண்மை விளங்கும்."

இதைக் கேட்டதும் எனக்கு அழகப்பா பெண்கள் கல்லூரியை உடனே போய்ப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டுவிட்டது.

## அழகப்பா பெண் கல்லூரி

நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால் நம்முடைய ஒப்பு உயர்வற்ற கவிஞராகிய சுப்பிரமணிய பாரதியார் பாரத நாட்டுப் பெண்கள் இருந்த நிலையை எண்ணியெண்ணி மனம் நொந்தார். அவர்கள் விடுதலை அடைவதற்கு வழி இல்லையா என்று ஏங்கி ஏங்கி உருகினார். பொது வாழ்விலும், கல்வித் துறையிலும் பெண்கள் ஆண்களுக்குச் சமமாக முன்னேற வேண்டும் என்பதற்காக, "பெண்மை வாழ்கவென்று கூத்திடுவோமடா!" என்ற விடுதலைச் சங்கை முழங்கினார்.

உடனே அவருக்குப் பெண்கள் விடுதலை அடைந்து பெண்மை நிலை அடைந்துவிட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டு உற்சாகம் பொங்கிவிட்டது! தமிழ் நாட்டில் புதுமைப் பெண்கள் தோன்றி வளர்வதைக் கண்டார்.

"போற்றி போற்றி ஓராயிரம் போற்றிநின்
பொன்னடிக்குப்ம் பல்லாயிர போற்றிகாண்!"

என்று புதுமைக் கவி பாரதியார் புதுமைப் பெண்ணுக்குப் போற்றி கூறினார். இவ்விதம் மகாகவியினால் பாமாலை சூட்டப்பெற்ற புதுமைப் பெண்கள் இந்த நாட்டில் தோன்ற வேண்டாமா? அதற்காகவே டாக்டர் அழகப்பர் காரைக்குடியில் பெண்கள் சங்கம் ஒன்றும் ஆரம்பித்திருக்கிறார்.

இந்திய சர்க்கார் நிதி மந்திரியாக இருந்த திரு சிந்தாமணி துவாரகநாத் தேஷ்முக் அவர்களால் 1954-ம்

ஆண்டு அழகப்பா பெண் கல்லூரி ஆரம்பித்து வைக்கப் பட்டது. இப்பொழுது இந்தக் கல்லூரியில் இண்டர் மீடியட்வரை சொல்லிக் கொடுக்கப்படுகிறது. 1957-ம் ஆண்டில் பட்டப் பரீட்சைகள் ஏற்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

அழகப்பா பெண் கல்லூரியை எங்கு வைத்து நடத்துவது என்று புரியாமல் தவித்துக்கொண்டிருந்த போது டாக்டர் அழகப்பா கோட்டையூரில் உள்ள தம்முடைய அரண்மனை போன்ற பங்களாவையே அந்தக் கல்லூரிக்காகக் கொடுத்துவிட்டார். கல்லூரியின் கட்டடத்துக்குள் நுழையும்போதே கல்லூரி பிரின்ஸிபால் மிஸ் எஸ். சுதா மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்றார். மிஸ் எஸ். சுதா எம். ஏ., பி. டி., அவர்கள் சென்னை திருவல்லிக்கேணி தேசியப் பெண் உயர்தரப் பாட சாலையில் உபாத்தியாயராகவும், பெண் சேவாஸங்க உதவி அதிகாரியாகவும் தொண்டாற்றியிருக்கிறார். பெல்லாரி, அனந்தப்பூர், திருச்சி, கோவை, சேலம், நீலகிரி முதலிய இடங்களில் பெண் சேவாஸங்க உதவி அதிகாரியாகப் பணியாற்றியிருக்கிறார். இவ்வாறு பல இடங்களில் சேவை செய்த அனுபவத்துடன், கல்வித் துறையில் தொண்டாற்ற வேண்டும் என்ற உற்சாகமுடையவராகவும் இருக்கிறார். எனவே அழகப்பா பெண் கல்லூரி அவர் காலத்தில் நமது ராஜ்யத்திலேயே சிறந்த கல்லூரியாகத் திகழும் என்று நிச்சயம் எதிர்பார்க்கலாம்.

அமைதியான சூழ்நிலையில் அரண்மனை போன்ற மாளிகையில் அமைந்திருக்கும் பெண் கல்லூரியில் இருந்து திரும்பியபொழுது எனக்கு ஒரு எண்ணமே மேலோங்கியிருந்தது. இந்தக் கல்லூரியை விட்டு வெளியேறும் எத்தனையோ பெண்மணிகள் விஜயலக்ஷ்மி பண்டிட்களாகவும், சரோஜினி தேவிகளாகவும், கஸ்தூரிபாக்களாகவும் உலகம் புகழும்படி விளங்கப் போகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை.

"தமிழ் நாட்டுப் பண்பு கெடாமல் பெண்கள் பட்டப் படிப்பும் பெற வேண்டும் என்பதுதான் டாக்டர் அழகப்பரின் நோக்கம்" என்றார் பிரின்ஸ்பல் மிஸ் சுதா.

ஆமாம்; பெண்கள் படித்தால் மட்டும் போதுமா? நமது பண்பாடு அல்லவா முக்கியம்? அதற்கான முறையில் கல்லூரியை அமைத்து நடத்திவரும் அழகப்பருக்குத் தமிழ்நாட்டுப் பெண்மணிகளின் சார்பாக என் நன்றியைத் தெரிவித்துவிட்டுக் கோட்டையூரிலிருந்து புறப்பட்டேன்.

"இன்னும் எத்தனை கல்லூரிகள் பார்க்க வேண்டும்?" என்று கேட்டேன்.

"இரண்டு கல்லூரிகள் இருக்கின்றன."

"சரி; அவைகளையும் பார்த்து விடுவோம். புறப்படுங்கள்" என்றேன். கார் காரைக்குடியை நோக்கிப் பறந்தது.

## 7. கல்வியை வளர்ப்போம்

நம் தேசத்தில் உள்ள கல்வி முறையை மாற்றி அமைக்க வேண்டும் என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்கிறார்கள். அதை மாற்றி அமைப்பதற்கான பல யோசனைகளையும் கூறி வருகிறார்கள். இந்த யோசனை சுவாமி விவேகானந்தர் காலத்திலிருந்து கூறப்பட்டு வருகிறது. ஆனால் யாரும் துணிந்து காரியத்தில் செய்ய முன்வரவில்லை. கல்வி முறைக்கு நல்ல மாற்றுத் திட்டத்தை வரையறுத்துக் கொடுக்கவில்லை. இவை எல்லாவற்றையும் நன்கு ஆராய்ந்து, தம்முடைய அனுபவத்தையெல்லாம் பயன்படுத்தி அருமையான கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்தார் ராஜாஜி. தேசத்தின் நலனை தம்முடைய நலனாக, தேச மக்களின்

வாழ்வே தம்முடைய வாழ்வாகக் கருதி வாழும் உத்தமர் கொண்டு வந்த கல்வி முறையை ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு நாடு உயரவில்லை. எனவே, அவர் கொண்டு வந்த அருமையான கல்வித் திட்டம் நம்முடைய காலத்துக் குழந்தைகளுக்குப் பயன் அளிக்காமல் போய் விட்டது. கல்வித் திட்டம் இப்பொழுது ஏற்கப்படா விட்டாலும் பின்னால் ஏற்றுக் கொள்ளத்தான் போகிறார்கள். எதிர்காலத்துக் குழந்தைகள் கட்டாயம் ராஜாஜியின் இந்தக் கல்வி முறை மூலமாகப் பயன் பெறத்தான் போகிறார்கள்.

சென்னை ராஜ்யத்தில் பல லட்சம் குழந்தைகள் படிக்க வசதியின்றிப் பள்ளிக்கூடம் போகாமல் இருக்கிறார்கள். அவர்களை எல்லாம் உடனே கல்வி அறிவு பெற்றவர்களாக்கும் யோசனையை ஏற்றுக் கொள்ளச் சர்க்கார் முன்வரவில்லை. எந்தக் கல்வித் திட்டம் நாட்டில் நடந்தாலும் அதன் மூலம் சிறுகச் சிறுகவாவது இந்த நாட்டில் உள்ள எல்லாக் குழந்தைகளும் கல்வி அறிவு பெறுவதற்கு வழி செய்ய வேண்டியது அவசியம்.

காலத்தின் நிலைமையையும், இந்த நாட்டில் உள்ள மக்களின் சூழ்நிலையையும், அறிவுத் தேவையையும் நன்கு உணர்ந்த டாக்டர் அழகப்பர் ஒரு நல்ல காரியம் செய்திருக்கிறார். கல்வித் திட்டத்தில் என்ன மாறுதல் வந்தாலும் வராவிட்டாலும் இந்த நாட்டில் இப்பொதுள்ள உபாத்தியாயர்கள் எண்ணிக்கை போதாது. ஆகையால் உபாத்தியாயர்களைத் தயாரிக்க வேண்டும் என்பதை நன்கு உணர்ந்திருக்கிறார். அதற்காக கல்லூரியை ஆரம்பிக்க வேண்டும் என்று தீர்மானித்து 1950-ம் ஆண்டு காரைக்குடியில் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி ஒன்றை ஆரம்பித்து நல்ல முறையில் நடத்தி வருகிறார். அதன் மூலம் இந்த நாட்டில் கல்வியை வளர்ப்பதற்குப் பாடுபட்டு வருகிறார்.

## ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி

அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி இந்த மாகாணத்தில் உள்ள இதர உபாத்தியாயர் பயிற்சிக் கல்லூரிகளைவிடப் பல வழிகளில் உயர்ந்ததாக விளங்கி வருகிறது. இந்தக் கல்லூரியில் வெறும் ஏட்டுப் படிப்பு மட்டும் போதிக்கப்படுவதில்லை. உபாத்தியாயருக்கான பயிற்சியையும் செய்முறையாக அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்படுகிறது. இதற்காக ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியின் நேரடியான சொந்தமானதாக நாலு பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன.

மாதிரிப் பள்ளி, ஆதாரப் பள்ளி, மாண்டிசோரிப் பள்ளி, பிரிபரேட்டரிப் பள்ளி என்று நான்கு கல்வி ஸ்தாபனங்களை அமைத்திருக்கிறார்கள். இந்தப் பள்ளிக் கூடங்களில் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி மாணவர்கள் தாங்கள் கற்ற பாடங்களை உயர்தரப்பள்ளி, ஆரம்பப் பள்ளி மாணவர்களுக்கு அவ்வப்போது சொல்லிக் கொடுத்துப் பழகும் அருமையான வாய்ப்பு இருக்கிறது.

இதுவரை அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் இருந்து வெளியேறிய மாணவர்கள் பண்பட்ட உபாத்தியாயர்களாக, பல ஆண்டுகள் படிப்புச் சொல்லிக் கொடுத்து அனுபவம் பெற்ற ஆசிரியர்களாக வெளியேறுகிறார்கள். அவர்களுடைய படிப்பு முடிந்தவுடன் ஆசிரியர் தொழிலுக்குப் போவதிலிருந்த நம்பிக்கையும் தைரியமும் அவர்களுக்கு இயற்கையாகவே ஏற்பட்டு விடுகிறது.

எந்த விஷயத்தையும் ஏட்டில் படிப்பதோடு நின்று விடாமல் அதைக் காரியத்தில் பயிற்சி செய்து பார்க்கக் கூடிய உயர்ந்த படிப்பு முறை இந்தக் கல்லூரியில் கட்டாயப்படுத்தப்பட்டிருக்கிறது.

மைசூர் சர்வகலாசாலை வைஸ் சான்ஸலர் திரு சி. ஆர். ரெட்டி அவர்களால் ஆரம்பித்து வைக்கப்பட்ட இந்தக் கல்லூரியிலிருந்து சென்ற ஆறு ஆண்டுகளுக்குள் எத்தனையோ மாணவ ஆசிரியர்கள் வெளிவந்திருக்கிறார்கள். அவர்கள் எல்லோருமே திறமைமிக்க ஆசிரியர்களாகத் திகழ்ந்து வருகிறார்கள்.

இந்த நாட்டின் எதிர்காலச் செல்வங்களான இளைஞர்களை உருவாக்கும் பொறுப்பு வாய்ந்த தொழிலில் ஈடுபட்டு உழைப்பவர்கள் அவ்வுபாத்தியாயர்கள். அவர்கள் சாதாரண மாணவர்களாக இருக்கலாமா? அவர்களுக்கு நாட்டுப் பற்றும், ஒவ்வொரு பிரஜைக்கும் உரிய கடமை உணர்ச்சியும் இருக்க வேண்டுமல்லவா? அதற்காக இந்த நாட்டுப் பிரஜைகளுக்கான கடமை உணர்ச்சியை உணர்த்தும் விசேஷ வகுப்புக்களும் இங்கே நடத்தப்படுகின்றன. அதற்கு இந்த நாட்டில் உள்ள மிகச் சிறந்த அறிஞர்கள் பலரை வரவழைத்து அவர்கள் மூலம் ஆசிரியப் பயிற்சி மாணவர்களுக்குப் பல அரிய சொற்பொழிவுகள் நடத்துகிறார்கள்.

ஆங்கிலம், விஞ்ஞானம், தமிழ் மூன்று பாடங்களுக்கும் வேண்டிய ஆசிரியர்களைப் பயிற்றுவிக்கிறார்கள். அத்துடன் அவர்களுடைய பொது அறிவு வளர்வதற்காக மிகச் சிறந்த நூல் நிலையம் ஒன்றும் வைத்திருக்கிறார்கள். இந்த நிலையத்தில் உலக அறிவை வளர்க்கும் உயரிய கருத்துடைய பல பத்திரிகைகளும் வருகின்றன.

மனோதத்துவ ஆராய்ச்சிக் கூடத்திலும், சித்திர வேலை வித்தியாசாலைப் பணியிலும், உடற்பயிற்சிச் சாலையிலும் அவர்களுக்குப் பயிற்சி கொடுக்கப்படுகின்றன.

இவ்வளவு தூரம் மாணவர்களுக்குப் பயிற்சி கொடுத்த பிறகும் திருப்தியடையாமல் மாணவர்களை

நாட்டின் பல பகுதிகளில் உள்ள பாடசாலைகளுக்கும் அனுப்பி வைக்கிறார்கள். அந்த நீண்ட காலம் பிள்ளைகளுடன் பழகி, அவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து வரும் அனுபவம் நிறைந்த ஆசிரியர்களிடமிருந்து அவர்கள் அனுபவங்களை எல்லாம் பெறுவதற்கு வேண்டிய வசதிகளையும் செய்து கொடுத்து வருகிறார்கள்.

சென்ற ஆண்டு அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியிலிருந்து பதினெட்டு உயர்நிலைப் பள்ளிகளுக்கு மாணவர்கள் அனுப்பி வைக்கப்பட்டார்கள். காரைக்குடி, ராமநாதபுரம், திருமங்கலம், தஞ்சாவூர் ஆகிய பல ஊர்களில் உள்ள மிகச் சிறந்த உயர்தரப் பாடசாலைகளுக்குச் சென்று அந்த மாணவர்கள் பயன் அடைந்து வந்தார்கள்.

இவ்வாறு ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி மாணவர்களைத் தயாரித்து வருபவர் பிரின்ஸிபல் திரு ப. துரைக்கண்ணு முதலியார் எம்.ஏ.எல்.டி., டி.பி., இ. ஸி., அவர்கள்.

திரு ப. துரைக்கண்ணு முதலியார் அவர்களைத் தமிழ்நாட்டு ஆசிரியர் உலகம் நன்கு அறியும். அவர் ஆசிரியராகவும், தலைமை ஆசிரியராகவும் சென்னை சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் திறமையோடு பணியாற்றியவர். சென்னை அரசாங்கக் கல்வி இலாகா நியமித்த பல விசேஷ குழுக்களில் அங்கம் வகித்து அரிய முறையில் சேவை செய்தவர். சென்னை ஆசிரியர் சங்கத்தின் தலைவராகவும், தலைமை ஆசிரியர் சங்கத்தின் துணைத் தலைவராகவும் பல ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றியவர்.

இன்றைய தினம் டாக்டர் அழகப்பா ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியின் பிரின்ஸ்பலாக இருப்பதுடன், அந்தக் கல்லூரியைச் சேர்ந்த மாதிரி உயர்நிலைப் பள்ளி,

ஆதாரப் பள்ளி, மாண்டிசோரிப் பள்ளி, பிரிபரேட்டரி பள்ளி முதலியவைகளின் கண்காணிப்பாளராகவும் இருந்து இணையற்ற முறையில் சேவை செய்து வருகிறார். இராமநாதபுரம் மாவட்ட ஆசிரியர் சங்கத் தலைவராகவும் இருந்து அவர்கள் நிலையை உயர்த்தப் பாடுபட்டு வருகிறார்.

இந்த ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியைப் பார்த்த போது எனக்குப் பழைய வாக்கு ஒன்று நினைவுக்கு வந்தது. "எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்" என்றல்லவா நமது முன்னோர்கள் சொல்லி யிருக்கிறார்கள். ஆசிரியர்களைக் கடவுளுக்கு அடுத்தபடியாக அல்லவா வைத்துப் போற்றியிருக்கிறார்கள். ஆகவே அப்பேர்ப்பட்ட கடவுளர்களைத் தயாரிக்கும் கல்வி நிலைய மல்லவா இது? சரி; கடவுளர்களுக்கும், அவர்கள் வாழும் கல்வித் தலத்துக்கும் கும்பிட்டுவிட்டு வேறு இடத்துக்குச் செல்வோம்.

* * *

அங்கென்ன யாரோ மண்ணை வெட்டிக் கொண்டு போய்க் குழியில் போடுகிறார்களே! பாணுவ வீரர்கள் போல் அல்லவா ஒழுங்காக வேலை செய்கிறார்கள்! பார்ப்பதற்கு இவ்வளவு நாகரிகமாகத் தோன்றும் இவர்கள் மண்ணைத் தலையில் சுமந்து செல்வானேன்? இவர்கள் எல்லாம் யார்?

"இவர்கள்தான் உடற்பயிற்சிக் கல்லூரி மாணவர்கள்" என்றார் என்னுடன் வந்தவர்.

"என்ன, உடற்பயிற்சி மாணவர்களா? அவர்கள் ஏன் மண்ணைச் சுமக்க வேண்டும்?"

"தண்டால் எடுப்பதும், பஸ்கி போடுவதும், ஆசனம் பயில்வதும் மட்டும்தான் உடற்பயிற்சியா? மண்ணை வெட்டுவது உடற்பயிற்சி யாகாதா? இங்கே

உள்ளவர்களுக்கு உழைப்புத்தான் தெய்வம். வேலை செய்வதில் ஏற்றத் தாழ்வு கிடையாது என்பதுதான் இலட்சியம். இதை நன்கு உணர்ந்தவர்கள் இந்த உடற் பயிற்சிக் கல்லூரி மாணவர்கள்" என்று பதில் கிடைத்தது.

உடற்பயிற்சிக் கல்லூரியைத் துவக்கி வைப்பதற் காக மைசூர் ராஜப் பிரமுகர் வரப் போகிறார். அவர் வருவதற்குள் இத்தனை பெரிய பள்ளங்களைச் சமன் செய்து சுத்தமாக்கிவிட வேண்டும். இதற்குச் சாதாரண மாகக் கூலி ஆட்களை வைப்பார்கள். அவர்கள் ஏதோ கடனுக்கு வேலை செய்வார்கள். நாளைக் கடத்துவார்கள். வேலையும் சுத்தப்படாது. இதை நன்கு உணர்ந்த உடற் பயிற்சி மாணவர்கள் இந்தக் காரியத்தைத் தாங்களே செய்ய முற்பட்டார்கள். உற்சாகத்துடனும் கடமை உணர்ச்சியுடனும் செய்துவிட்டார்கள். பார்ப்பவர்கள் வியந்து நிற்கும்படி செய்து முடித்தார்கள். தமிழ்நாட்டு மாணவர்களே! அழகப்பா உடற்பயிற்சி மாணவர்களைப் பின்பற்றி எல்லாக் கல்லூரி மாணவர்களும் காரியம் செய்ய முன் வாருங்கள். அவ்வாறு செய்தால் அந்தக் கல்லூரியும், அந்தக் கல்லூரி மாணவர்களும், ஏன் இந் நாடே உயர்ந்துவிடும்.

## உடற்பயிற்சிக் கல்லூரி

நாடு சுதந்திரம் பெற்றவுடன் எத்தனை எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டு வருவதைக் காண்கிறோம். ஒரு காலத்தில் மாணவர்கள் உடற்பயிற்சி வகுப்புக்குப் போவது கௌரவக் குறைவு என்று கருதப்பட்டது. அந்த வகுப்புக்குத் தம்முடைய பையனை அனுப்ப மறுத்த பெற்றோர்களும் இருந்தார்கள். அவை எவ் வளவு தவறான காரியங்கள் என்பதைத் தேசம் இன்று உணர ஆரம்பித்துவிட்டது. உடற் பயிற்சியின்

உயர்வை மக்கள் உணர்ந்து போற்ற ஆரம்பித்து விட்டார்கள்.

"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்பது ஆன்றோர் வாக்கு. உடம்பைப் பேணிப் பாது காப்பதைத் தெய்வ வழிபாடாகவே நமது முன்னோர்கள் கருதி வந்தார்கள். அதற்காக எத்தனை எத்தனையோ அதிசயமான உடற்பயிற்சிகளைத் தெய்வ வழிபாட்டிலேயே இணைத்து வைத்திருந்த நாடு நமது நாடு. எப்படியோ யார் செய்த பாபத்தினாலோ இந்த நாட்டு மக்கள் உடற்பயிற்சியின் உயர்வை மறந்து சோம்பேறி களாகி விட்டனர். ஏதாவது ஒரு சோம்பேறி இருப் பதைக்கூடக் கௌரவமாகக் கருத ஆரம்பித்து விட்டனர்.

இந்த மாயையெல்லாம் இன்று விலகிவிட்டது. உடற்பயிற்சிக்கான கல்லூரிகள் ஏற்படும் அளவுக்கு நாடு முன்னேறிவிட்டது. பல கல்வி தர்மங்களுக்கு வழி காட்டியாக இருந்து வரும் டாக்டர் அழகப்பர் உடற்பயிற்சிக் கல்லூரி ஒன்றையும் திறந்திருக்கிறார்.

இதற்கு முன் சென்னை ராஜ்யத்தில் உடற்பயிற்சிக் கல்லூரி ஒன்றே ஒன்றுதான் இருந்தது. சென்னையை அடுத்துள்ள சைதாப்பேட்டையில் ஒய். எம். சி. ஏ. கல்லூரி என்ற பெயரில் ஓர் உடற்பயிற்சிக் கல்லூரி உள்ளது. இவ்வளவு பெரிய ராஜ்யத்துக்கு ஒரே ஒரு உடற்பயிற்சிக் கல்லூரி போதுமா? போதாது. இன்னும் பல கல்லூரிகள் வேண்டும். இந்தக் குறையை ஓரள வாவது தீர்க்க முன் வந்த டாக்டர் அழகப்பரை வாழ்த்துவோம்.

இப்போது இந்தக் கல்லூரியில் நூற்று ஐந்து மாணவர்கள் படித்து வருகிறார்கள். நவீன காலத்து உடற்பயிற்சி, யோகாசனம், நமது நாட்டு உடற்பயிற்சி, விளையாட்டுகள் எல்லாம் கற்றுக் கொடுக்கப்படுகின்றன.

இந்தக் கல்லூரியின் முதல்வர் திரு எம். ராப்ஸன். இவர் மிகவும் உற்சாகம் நிறைந்த இளைஞர். ஏற்கனவே அழகப்பா கலைக் கல்லூரியில் உடற்பயிற்சி ஆசிரியராக இருந்தவர். அழகப்பா கல்வி அறநிலையத்தின் சார்பாக அமெரிக்காவுக்குச் சென்று உடற்பயிற்சி சம்பந்தமான மேலும் பட்டம் பெற்றுத் திரும்பி வந்திருக்கிறார். மாணவர்களுள் மாணவர்களாக இருந்து அவர் தொண்டாற்றி வரும் முறையை எவ்வளவு பாராட்டினாலும் தகும். உடற்பயிற்சி என்பது வெறும் பொழுது போக்கும் காரியம் அல்ல. அதன் மூலம் உடலைப் பேணி வளர்த்து எத்தனையோ ஆக்க வேலைகள் செய்யலாம். அவ்வாறு ஆக்க வேலைக் காக தொழிலில் மண் சுமப்பதும் உயர்ந்ததுதான். முதன் மந்திரியாக அமர்ந்து தொண்டாற்றுவதும் உயர்ந்ததுதான். இரண்டு வேலைகளைப் பார்ப்பதற்கும் உடல் நலம் நன்றாக இருக்க வேண்டும் என்ற உயரிய லட்சியத்தை அடிப்படையாகக் கொண்டவர் திரு ராப்ஸன். அந்த உயர்ந்த கருத்துடன் மாணவர்கள் உள்ளத்துக்கும் உடலுக்கும் பயிற்சி அளித்து வருகிறார்.

இந்த ஆண்டுதான் டாக்டர் அழகப்பர் உடற்பயிற்சிக் கல்லூரியை ஆரம்பித்தார். படுத்த படுக்கையில் இருந்துகொண்டே இந்தக் கல்லூரியை ஆரம்பித்து வைத்திருக்கிறார். தம்முடைய உடல் நோயையும் கவனியாமல் உடற்பயிற்சிக் கல்லூரித் துவக்க விழாவில் கலந்து கொள்வதற்காகச் சென்னையிலிருந்து அவர் காரைக்குடிக்கு வந்தார்.

காரைக்குடி ரயில்வே ஸ்டேஷனுக்கு அவர் வந்த போது அவரை மாணவர்களும் ஆசிரியர்களும் வரவேற்ற முறை மிகவும் உயர்வாக இருந்தது.

காரைக்குடி ரயிலடியிலிருந்து அழகப்பா கல்லூரி இருக்கும் இடம் சுமார் இரண்டு மைல் தூரம் இருக்கும். இரண்டு மைல் நீளத்திலும் சாலையின் இருபுறத்திலும்

மாணவர்கள் அணிவகுத்து நின்று, கரம் குவித்து வணங்கி, கைகொட்டி மகிழ்ந்து, மலர் தூவி வரவேற்றார்கள். தனயர்களைக் கண்ட தந்தையைப்போல டாக்டர் அழகப்பர் அகமும் முகமும் மலரக் கை எடுத்து வணங்கி வரவேற்பை ஏற்றுக் கொண்டார்.

இந்தக் காட்சி என்றென்றும் என் கண்முன்னே இருந்துகொண்டிருக்கும்.

ஒரு மனிதன் செய்யவேண்டிய மிகச் சிறந்த பணியைச் செய்து, பார் உள்ளளவும் தம்முடைய பெயர் நிலைத்து நிற்கும்படியாக உயர்ந்துவிட்டார் அழகப்பர். அழகப்பா கல்லூரிகளில் இருந்து ஆண்டு தோறும் வரும் ஆயிரக்கணக்கான இளம் உள்ளங்களின் இதயத்தில் டாக்டர் அழகப்பர் என்றும் அழியா இடம் பெற்றிருப்பார் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை.

கடைசியாக ஒரு விஷயம். சென்னைக்குத் திரும்பியவுடன் டாக்டர் அழகப்பர் அவர்களை அவருடைய இல்லத்தில் சென்று கண்டேன். என் வியப்பையும் மகிழ்ச்சியையும் பாராட்டுதலையும் அவரிடம் தெரிவித்துக்கொண்டேன். டாக்டர் அழகப்பர் அவர்கள், “இவ்வளவு காரியங்களை நான் சாதித்ததற்கு முதலில் சென்னை சர்வகலாசாலை உப அத்யக்ஷகர் டாக்டர் லட்சுமணசாமி முதலியார் அவர்களுக்கு நன்றி செலுத்த வேண்டும். அவர்களுடைய பேருதவியின் பேரில்தான் நான் இத்தனை கல்லூரிகள் துவக்க முடிந்தது. அடுத்தாற்போல் திரு கே. வி. ஏஎல். எம். ராமநாதன் செட்டியார் அவர்களுக்கும், திரு ஸிவி. ஸிடி. வேங்கடாசலம் செட்டியார் அவர்களுக்கும் நான் ரொம்பவும் கடமைப்பட்டிருக்கிறேன் நான் நோய்வாய்ப்பட்டபின் திரு வேங்கடாசலம் செட்டியார் மிகுந்த சிரத்தை எடுத்துச் செய்துவரும் பணிகள் மிகவும் போற்றத்தக்கவை.

ஆகவே, நம் நாட்டு மக்கள் அனைவரும் இவ்வுறவையே பேணும்" என்று மிகுந்த நன்றி உணர்ச்சியுடன் கூறினார். எதாவது ஒரு நல்ல காரியத்தை ஆரம்பித்தாலும் அது வெற்றியுடன் நடைபெறுவதற்கு எவ்வளவோ கஷ்டங்கள் பட்டாக வேண்டும்; எத்தனை எத்தனையோ இடையூறுகளையெல்லாம் விலக்கிக்கொண்டு முன்னேற வேண்டும். 'மகத்தான தர்ம கைங்கரியம் செய்துவிட்டோம்' என்று டாக்டர் அழகப்பர் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கலாம். வெற்றி வியாபார உலகத்தில் சிறப் பாடுபட்டுச் சம்பாதித்த பொருள்களை எல்லாம் தர்ம கைங்கரியத்துக்காகக் கொடுத்திருக்கிறார் டாக்டர் அழகப்பர். இந்தத் தர்ம ஸ்தாபனம் நன்றாக நடைபெறுவதற்கு டாக்டர் அழகப்பர் கல்வி அறநிலைய ஸ்தாபனத்தில் தொண்டாற்றும் தொழிலாளர்களும், குமாஸ்தாக்களும், உத்தியோகஸ்தர்களும் கடமை உணர்ச்சியுடன் தொண்டாற்ற வேண்டும். இதர ஸ்தாபனங்களில் தொண்டாற்றிக் கொண்டிருக்கும் ஊழியர்களைவிட இந்தக் கல்வி ஸ்தாபனத்தில் தொண்டாற்றி வருபவர்கள் மிகவும் பாக்கியம் செய்தவர்கள்.

உத்தமமான தொழில் புரிவதுடன் உத்தமமான தர்ம ஸ்தாபனத்துக்குத் தொண்டு செய்யும் பேறும் பெற்றவர்களானவர்கள். டாக்டர் அழகப்பரின் பெயரைக் கேட்டாலே அங்கு தொழில் புரிபவர்களின் முகம் மலர்வதைக் கண்டேன்; அவர்களுடைய உள்ளத்தில் அளவற்ற அன்பும் பக்தியும் பெருகியோடுவதைப் பார்த்தேன். இவ்வளவு கடமை உணர்ச்சியுடன் நடைபெறும் அழகப்பர் கல்வி அறநிலையச் சிப்பந்திகள்மூலம் அழகப்பர் கல்லூரிகள் மேன்மையடையும் என்பதில் சந்தேகமில்லை. அதன்மூலம் டாக்டர் அழகப்பர் ஆற்றிய தொண்டு நல்ல பயன்பெறும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# 8. அழகப்பர் அமரரானர்

உலகம் பல கல்விமான்களைப் பெற்றுவிடலாம்; செல்வந்தர்களைப் பெற்றுவிடலாம். நாவலர்களையும் பாவலர்களையும் பெற்றுவிடலாம். ஆனல், ஒரு சில கொடை வள்ளல்களைப் பெறுதல் அரிதினும் அரிது. அத்தகைய வள்ளல்களில் ஒருவர் மறைந்துவிட்டார். சென்ற 1957 ஏப்ரல் ஐந்தாம் தேதி வெள்ளிக்கிழமை அன்று உண்மையான வள்ளல் ஒருவர் நம்மை விட்டுப் பிரிந்துவிட்டார்.

அறிவு தெரிந்த நாளிலிருந்து, கடைசி மூச்சு உள்ள வரையில் 'கொடை' 'கொடை' என்று கொடுப்பதைப் பற்றியே நினைத்து, கொடுப்பதைப் பற்றியே பேசி, கொடுப்பதிலேயே இன்பங்கண்டு, கொடை வள்ளலாகவே வாழ்ந்த டாக்டர் அழகப்பர் அமரராகி விட்டார். அவருடைய கொடையால் வளர்ந்த எண்ணற்ற கல்வி ஸ்தாபனங்கள் இன்று அழகப்பரைப் பிரிந்து தாயை இழந்த சேய்போலக் கலங்கி நிற்கின்றன.

அழகப்பரின் மறைவு கல்வித் துறைக்கு மட்டு மல்லாது இன்னும் பல துறைகளிலும் நஷ்டம் விளைவித்திருக்கிறது. தொழில் ஒரு தொழிலதிபரை இழந்து விட்டது; செல்வம் ஒரு செல்வந்தரை இழந்துவிட்டது; வண்மை ஒரு வள்ளலை இழந்துவிட்டது; வீரம் ஒரு வீரரை இழந்துவிட்டது.

எத்தகைய பெரியாரை எவ்வயதில் நாடு இழந்தது? நாற்பத்தெட்டு வயதில் தமிழ் நாட்டுக் கல்வி வளர்ச்சியிலும் தொழில் வளர்ச்சியிலும் உயிராயிருந்த ஒரு உத்தமரையல்லவா தமிழ் நாடு இழந்துவிட்டது?

* * *

டாக்டர் ஆர். எம். அழகப்பச் செட்டியார் 1909-ம் ஆண்டில் பிறந்தார்; லண்டனுக்குச் சென்று பாரிஸ்டர் பட்டம் பெற்றார்; பின்னர் இந்தியா திரும்பித் தொழில் துறையில் ஈடுபட்டார்; அந்தத் துறையில் பலவிதமான கஷ்ட நஷ்டங்களை அடைந்து படிப்படியாக முன்னேறி மிகப் பெரிய தொழில் அதிபரானார். முடிவில் தாம் ஈட்டிய செல்வங்கள் அனைத்தையும் பல கல்வி ஸ்தாபனங்களுக்கும், ஆராய்ச்சி நிலையங்களுக்கும் அள்ளிக் கொடுத்துக் கொடை வள்ளலானார். கடைசிக் காலத்தில் தம்முடைய சொந்த ஊரான கோட்டையூருக்கு அருகில் இருக்கும் காரைக்குடியில் உள்ள அழகப்பா கல்லூரிகளின் வளர்ச்சியில் தம்மை மறந்து தொண்டாற்றி வந்தார். இதன் மூலம் செல்வந்தர்கள், ஏழைகள், படித்தவர்கள், பாமரர்கள் அனைவருடைய அபிமானத்துக்கும் உகந்தவராக உயர்ந்திருந்தார். பிறந்த ஊரில் பிரபலமடைந்திருந்ததுபோலவே பரந்த உலகிலும் தம் புகழை நிலைநாட்டியிருந்தார்.

சென்ற பல மாதங்களாக நோய்வாய்ப்பட்டு நடமாட முடியாமல் படுத்த படுக்கையிலேயே இருந்தார். உடல் மோசமான நிலையிலிருந்தபோதிலும் அவர் முகத்தில் மட்டும் அறிவுக் களை வீசிக்கொண்டிருந்தது. சென்னை நகருக்கு யார் வந்தாலும் டாக்டர் அழகப்பரைப் பார்க்காமல் செல்லவே மாட்டார்கள். படுத்த படுக்கையில் இருந்துகொண்டே அவர் வந்த விருந்தினர்களை உபசரித்த பண்பும், தாம் மேற்கொண்ட பணியை நிறைவேற்ற ஆற்றிய தொண்டும் தனிச் சிறப்பு வாய்ந்தவை.

காரைக்குடி கல்லூரிகளில் ஒரு வைத்தியக் கல்லூரியையும் ஏற்படுத்தி அதை ஒரு பல்கலைக் கழகமாக மாற்றிவிட வேண்டும் என்று டாக்டர் அழகப்பர் தம்முடைய இறுதிக் காலத்தில் துடிதுடித்துக்கொண்

டிருந்தார். அதற்கான நல்ல சூழ்நிலையையும் உருவாக்கிக் கொண்டு வந்தார். அந்த எண்ணம் ஈடேறுவதற்குள்ளாகவே காலன் அவசரப்பட்டு விட்டான். ஆனாலும் டாக்டரின் ஆசை விரைவில் நிறைவேறும். என்பது திண்ணம்.

அவரது வாழ்க்கை வரலாற்றை ஒவ்வொருவரும் புரிந்துகொள்ள வேண்டும். அவர் பொருள் ஈட்டியதில் காட்டிய ஆர்வமும் திறமையும் ஈடு இணையற்றது. அதைப்போல ஈட்டிய பொருளை நல்ல காரியங்களுக்கு அள்ளிக் கொடுத்த கொடைத் திறனும் நாவாரப் போற்றிப் பாராட்டுதற்குரியது. கடுமையான நோயின் கொடுமைக்கு மத்தியிலும் தளராத மன உறுதியுடன் தாம் எடுத்த காரியத்தை நிறைவேற்றி வந்ததில் அவருக்கு ஈடாக யாரையும் கூற முடியாது. இந்த உயர்ந்த குணங்கள் எல்லாம் நம்முடைய மக்களுக்கு சிறந்த எடுத்துக்காட்டாயிருக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இந்த நாட்டில் கல்வியும் தொழிலும் உள்ள வரையில் டாக்டர் அழகப்பரின் அரிய தொண்டின் பெருமை குன்றிவிடா விளக்காக என்றென்றும் ஒளி வீசிச் சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கும்.

